# தோற்றுவாய்



திருவாசக ஆசிரியரது வரலாற்றினைப் ட ்த திருவாசகம் யாது நமக்கு அறிவுறுத்துகின்ற தெ ைதச் ருக்கமாக ஈண்டு ஆராய்வாம திருவாசக ஆசிரி து திருப் பெயரைத் தெளிவாகத் தமது நூலுள் கூறவில ாயினும், ஆசிரியரது திருப்பதி திருவாதவூரென்பது 'வாதவூரினில் வந்தினி தருளிப் பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்' என்ற அடிகளாற் குறிப்பாயறியக் கிடக்கின்றது.

பண்டாய நான்மறையின் இறுதிச் செய்யுளில் 'மாசின் மணியின் மணிவார்த்தை பேசி' என்ற குறிப்பால் அடிகளியற்றிய நூல் மணிவார்த்தையாகிய மணிவாசகம் என்று கருத இடமுண்டு. மணிவாசக ஆசிரியர் மணிவாசகனாரெனவும் மாணிக்கவாசகரெனவும் கூறப்படுதலியல்பே.

அருட்பத்திலே, 'திருப்பெருந்துறையில் நிறைமலர்க் குருந்த மேவியசீர்' என்றமையால் அவர்க்குத் திருப்பெருந்துறையிற் குருந்த மரத்தடியில் இறைவன் அருள் புரிந்தனனென்பது தெளிவு.

இறைவன் அந்தணனாகி ஆண்டு கொண்டருளியதும், குதிரைச் சேவகனாய் மதுரைப் பெருநன்மா நகரில் எழுந்தருளியதும், பாண்டியனுக்குப் பரிமாவிற்றதும், நரியைக் குதிரையாக்கிய நன்மையும், அடியவட்காகப் பாங்காய் மண் சுமந்தருளிய பரிசும், நந்தம்பாடி, உத்தரகோசமங்கை, திருப்பூவணம், பூவலம், திருவிடைமருதூர், திருக்கழுமலம், திருக்கழுக்குன்றம், தில்லை முதலிய விடங்களில் அடிகட்குக் காட்சி கொடுத்ததும், பெருந்துறையில் ஆண்டபோது 'தில்லையுட்

கோலமார் தரு பொதுவினில் வருக' என அடிகளைப் பணித்த தும், உடன்சென்ற அடியார் ஒன்ற ஒன்ற உடன் கலந் தருளியதும், திருவார் பெருந்துறையிற் கருவார் சோதியில் கரந்த கள்ளமும் கீர்த்தித் திருவகவலுட் குறிக்கப்பட்டன.

அடிகள் திருப்பெருந்துறையிலருளிய பதிகங்களிற் சில இறைவன் தமக்கு எளிவந்தருள் புரிந்ததை வியப்பனவா கும் அச்சோப்பத்து, சென்னிப்பத்து, அற்புதப்பத்து, அதிசயப்பத்து என்பவைகளத்தன்மையன. திருவால வாய்க்குச் சென்று அடிகள் திருப்பெருந்துறைக்கு மீளுங் காலே, திருவுத்தரகோசமங்கையிற் றங்கி நீத்தல் விண்ணப் பம் பாடியிருத்தல் கூடும். அன்றியும் திருப்பெருந்துறைக்கு மீண்டு வந்தவுடன் அடிகள் பாடிய சில பதிகங்களும் இறை வன் அடியாரோடு தாம் வீடடைய முடியாமை பற்றி வருந்தி இறைவன் தம்மை உடனே வீடு சேர்க்கவேண்டு மென்ற விருப்பத்துடன் அடிகள் பாடிய பதிகங்களாகும். அவை ஆசைப்பத்து, அடைக்கலப்பத்து, பிரார்த்தனைப் பத்து, புணர்ச்சிப்பத்து, வாழாப்பத்து, அருட்பத்து, திருச் சதகம், செத்திலாப்பத்து முதலியனவாகும். திருப்பெருந் துறையில் தங்கிய காலே சிவானுபோக முதிர்ச்சி யுற்றுப் பாடிய பதிகங்கள் பண்டாய நான்மறை, திருவார்த்தை, திரு வெண்பா, குழைத்தபத்து முதலியனவாகும். பிறர்க்கு வீட்டு நெறியை அறிவுறுத்துவான் பாடிய பதிகங்கள் திருப் பள்ளியெழுச்சி, திருப்பாண்டிப் பதிகம், திருத்தசாங்கம், சிவபுராணம், திருவம்மானை முதலியன. கோயிற் பதிகமென் பதும் திருவம்மானை பதிகமென்பதும் திருப்பெருந்துறை யிற் பாடப்பட்டனவாகவே தோன்றுகின்றன. அடிகள் திருப் பெருந்துறையை நீங்கித் தில்லைக்குச் செல்லுங்காலே திருவா ரூரிற் பாடப்பட்டது திருப்புலம்பல். பின்னர் திருவிடைமரு

தூரிற் பாடப்பட்டது திருவேசறவு. அது அருளெனக்கிங் கிடை 'மருதே யிடங்கொண்ட' என்றமையாற் காண்க.

பின்னர் அடிகள் திருக்கழுமல மடைந்து பிடித்த பத்துப் பாடியருளினர் திருவண்ணாமலையில் திருவெம்பாவை யும், திருக்கழுக்குன்றத்தில் அத்தலப் பதிகமும் பாடிய பின்னர், தில்லை யடைந்து கண்டபத்து, குலாப்பத்து முதலியவற்றில் தமது அநுபவத்தை இனிதுரைத்த ஆசிரியர், பிறர்க்கு உண்மை யறிவு அளித்தற் பொருட்டு அகவல் மூன்றினையும் குயிற்பத்து, கோத்தும்பி, திருப்பூவல்லி, திருத்தோணோக்கம், திருத்தெள்ளேணம், திருப்பொற்சுண் ணம், திருப்பொன்னூசல், திருவுந்தியார் அன்னைப்பத்து, முதலியவற்றைப் பாடிய பின், வீடுபேற்று விருப்பால் கோயில் மூத்த திருப்பதிகம், எண்ணப்பதிகம், ஆனந்த மாலை என்பவற்றைப் பாடி, விட்டிறந்து அடியவரொடு எழு வான் திருப்படை யெழுச்சி, யாத்திரைப்பத்து என்ப வற்றை இயற்றி, இறுதியாகச் சிவோபாதியை யொழிக்குந் திருப்படையாட்சியைப் பாடி இருத்தல் கூடும். அல்லது யாத்திரைப்பத்தை இறுதியாகப் பாடியிருத்தலுங் கூடும். மேற் குறித்த பதிகங்களுட் போந்த கருத்தை ஒரு சிறிது ஆராய்வோம்.

அச்சோப்பதிகத்தில் இறைவன் தம்மை மும்மல மறுத்து ஆட்கொண்டு வெண்ணீறணிவித்துத் தையலார் மையலிலே தாழ்ந்து விடாதபடி ஓங்காரத்துட் பொருளை யருளி உய்யு நெறி காட்டிச் சிவமாக்கித் தன் கழலே சேரும் வண்ணம் பணித்தமை கூறப்பட்டது. இது திருப்பெருந் துறையில் அடிகளை யாட்கொண்டதை வியந்து கூறப்பட்ட தாகும். சென்னிப்பத்தினுள் மூவராலு மறியப்படாத திருப் பெருந்துறை நாயகன் தனது சேவடியைத் தமது சென்னி

யிற் சூட்டித் தமதுள்ளத்தைக் கவர்ந்ததை அடிகள் இயம்பியதோடு, பக்தர்கள் இறைவன் திருவடியை யடைந்து பாசந்தீரப்பெற வேண்டுமென்று குறிப்பித்தார். இறைவன் அடியார்களைத் தலைவியாகக்கொண்டு அவர்கள் கையில் வளை கொண்டதுங் கூறப்பட்டது காண்க. அதன் ஐந்தாம் பாட்டில் 'வேயதோளுமை பங்கன்' என்றது தேவாரத்துள் 'வேயுறு தோளிபங்கன்' என்பதை நினைவுறுத்தும்

அதிசயப்பத்தினுள்ளும் அற்புதப்பத்தினுள்ளும் உலக வாழ்க்கைத் துயரினின்று தம்மை யாண்ட அதிசயத்தை அடிகள் விளக்கினர். உயிருண்ணிப்பத்தினுள் தாம பெற்ற சிவானந்தத்தை வியந்தனர்.

நீத்தல் விண்ணப்பத்தில் 'மலங்களைந்தாற் சுழல்வன்' என்றமையால் அடிகள் காலத்தில் பஞ்சபாச மென்ற கருத்துப் பயின்றமை தெளியபபடும உலகை வாழ்க்கைப பேரிடர்களுள் பெண்டிா மையல் மிகக வலிமையுடைத்து என்பதும அடிகள இறைவனை ஏசினும ஏத்தினும தன் பிழைக்கே குழைந்து வேசறுதலும் அதனுட் கூறபபட்டன. ஆசைப பத்தினுள் உடற்பொறையின் இழிவுந் தாம உடலிற்பற்றின்றிப் புளியம்பழம போன்றிருந்தமையும் இறைவன் திருவுருச் சோதியைக் காணவும பேராபிரமும பரவித் திரியவும ஆசைபபட்டமையும இறைவன் வந்து வாராவுலகந் தந்தாட் கொள்வான் என்பதும் குறிபபிககபபட்டன. அடைக்கலப் பத்தினுள் பழுத்த மனத்தடியா இறைவனுடன் போயினமையும் பெண்டிா வெகுளி வலையிலே தாம அகப்பட்டு வருந்தினமையும் இறைவன் அருளாரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்ற காலை விக்கினமையால் தண்ணீர் தந்து இறைவன் உய்யக் கொளள வேண்டுமென்பதையும் அடிகளியம்பினமை காண்க

**I**

பிரார்த்தனைப் பத்தினுள்ளும் அடியாரெல்லாம் அருளாரமுதப் பெருங்கடல் புக்காழ்ந்துத் தாம் இருளாராக்கை பொறுத்து எய்த்து அலந்தமையும்போரா ஒழியாப்பிரிவில்லா மறவா நினையா அளவிலா மாளா இன்பமாகடல் புகுதற்கு மெய்யன்பு தமக்கு வேண்டுமென்பதும் கூறு முகத்தான் அடியார்க்குக் கிடைத்த பேரின்பம் தமக்குக் கிடையாமை பற்றிய வருத்தங் குறிப்பித்தார்.

புணர்ச்சிப் பத்தினுள் இறைவனை கலந்து இன்புறும் பெற்றி தமக்கு எக்காலத்துக் கிட்டுமோ வென்று ஐயுற்று விரைந்தமை காண்க வாழாப்பத்தினுள் இறைவன் தம்மை அழைத்துக் கொள்ளாவிட்டால் உலகில் தாம் வாழ்வதில்லை என்று வற்புறுத்தினர்.

அதிசயப் பத்தினுள்ளும் வாசனைமலத்தை யொழிப்பதாகிய திருநாம அஞ்செழுத்தை நாம் எண்ணுமை குறித்தார். அருட்பத்தினுள் தாம் இறைவனை யாதரித்தழைத்த காலை அவன் அபயந்தராமை குறிப்பித்தார். செத்திலாப் பத்தினுள் வீடடைதற் பொருட்டுத் தாம் தம் முடலை விட்டு விடாமை பற்றிய தமது கலக்கத்தை யறிவித்தனர்.

திருச்சதகத்துள் அடிகள் இறைவன்பால் இடைவிடாத பேரன்பு செய்ய உறுதி கொண்டதும், திருவருளாலே நரகம் புகுந்தாலும் அதனை இகழாத மன நிலையுற்றதும், வீடு பெறத் தாம் நாடகத்தால் விரைவதும், தாள் நின்று உச்சிவரை உருகாமை பற்றித் தாம் வருந்துவதும், தமக்கு இறைவன் காட்டாதனவெல்லாங் காட்டிக் கேளாதனவெல்லாம் கேட்பித்துப் பிறவாமற் காத்தாட்கொண்டமையால் தாம் யார்க்கும் குடியல்லாத் தன்மை யெய்தியதும், தம நெஞ்சை அன்பின்மைக்காகக் கடிந்துகொள்வதும்,

காய வாழ்க்கையைத் தாம் கரிக்க இயாமையையும், ஆடிப் பாடி அன்புசெய்து அம்பலத்தாடும் பெருமான் கழலடி அடைய விரும்பினமையும் அறிவுறுத்தினமை காண்க. 'பண் டாய நான்மறையுள்' பெருந்துறைப் பெருமானை வாயாரப் பேசித் தாம் பிறப்பறுத்தமை தெரிவித்தார். 'திருவெண் பாவினுள் இருவினை நீங்காமையால் உடல் நீங்காதிருந்தும இறைவன் தமக்கு ஆனந்தமால் ஏற்றியதும் மூவரும் முப் பத்து மூவருங் காணாத அவன் யாவரும் பெற்றறியா இன் பத்துள் தம்மை வைத்துத் தம்முடைய நெஞ்சையே ஊராகக் கொண்டதும் உரைத்தார். திருவாத்தையுள் பெருந் துறைப் பெருமான் மண்ணிடை வந்திழிந்து தமக்கு அதிப் பிரமம் வெளிப்படுத்திய வகையறிவார் தம்பிரானாவார் என் றார். குழைத்தபத்தினுள் உடலை நீங்கி விடுதலை யருள வேண்டுமென்று வேண்டினும தம செயலற்று இறைவன் திருவுள்ளக் கருத்தின் வழியே நிற்குமபடி தம்மை யவன் குழைத்து விட்டதாகக் கூறினமை காண்க. திருப்பள்ளி யெழுச்சியுள் 'யாவருமறிவரியாய் எமக்கெளியாய்' 'திருப் பெருந்துறையுறை கோயிலுங் காட்டி, அந்தணனாவதுங் காட்டி' என்றமையால் தமக்கு இறைவன் அந்தணனாய் எழுந் தருளியதும் அவன் திருப்பெருந்துறையில் கோயில் கொண் டமையும் தெரிவித்தமை யறிக. திருப்பாண்டிப் பதிகத்தில் இறைவன் பரிமேலெழுந்தருளி வந்து பாண்டியமன்னனுக் குப் பிறவியறுத் தருளியதுங் கூறிப் 'பாண்டிப்பிரான் தன் னடியவர்கட்கு மூல பண்டாரம் வழங்குகின்றான் வந்துமுந்து மினோ' என்றார் இறைவனைப் பாண்டியனார் தென்னவன் மீனவன் என்ற பெயர்களா லழைப்பது இதனுட் காண்க.

திருத்தசாங்கம் பெருந்துறையிற் பாடப்பட்டதாகவே தோன்றுகிறது. பெருந்துறைக்கோன் திருநாடு தென்

பாண்டி நாடெனவும், ஊர், உத்தரகோச மங்கை யெனவும்,
ஆறு, ஆனந்த வெள்ளமெனவும், மலை, அருள்மலை யெனவும், ஊர்தி,
குதிரையெனவும், படை, கழுக்கடையெனவும், பறை, நாத
மெனவும், தார், தாளியறுகெனவும், கொடி, ஏற்றுக்கொடி
யெனவு மியம்பினர். கீர்த்தித் திருவகவலுள் நீற்றுக் கொடி
யும் சமூகீரமாலையும் அவனுக்குரியன வென்று செப்பினும்
கொடியும் மாலையு மொழிந்த பிறவெல்லாம் தசாங்கத்துட்
கூறியவாறே கூறினர். திருவம்மானையும் திருப்பெருந்துறை
யிற் பாடப்பட்டதாகவே தோன்றுகிறது. அதனுள் இறை
வன் பிறந்த தோளுய்த் தமது சிந்தையை உருக்கியதும்,
சிவன் காட்டிக் குருவாகித் தென் காட்டி, நாட்டார் நகை செய்
யத் தம்மை யாட்கொண்டதும், தாம் மேலை வீடெய்துமாறு
ஆட்கொண்டதும், மதுரையில் ஈசன் மண் சுமந்து கூலி
கொண்டு மன்னனால் மொத்துண்டு புண் சுமந்ததும், அவன்
தன்னாரா சமிழ்நிகதுந் தன் பாண்டிநாட்டானே யிருப்பதும்,
பாண்டிநாட்டைச் சிவலோகமாக்கி வைத்ததும், தாம் ஆனை
யாய்க் கிடமாய் மானுடராய்த் தேவராய்ப் பிறவாய்ப் பிறந்
திறந்செய்ததும் இயம்பினர். தமது முந்தைவினை முழுது
மோயச் சிவபுராண முரைப்பார், தாம் புல்லாகிப் பூடாய்ப்
புழுவாய் எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்ததும், தாமுய்யத்
தம் முள்ளத்தே இறைவன் ஓங்காரமாய் நின்றதும், தமக்கு
நிலந் தன்மேல் வந்தருளி நீள் கழல்கள் காட்டியதும் அறி
வுறுத்தினர். திருவேசறவினுள்ளும் நரிகளை யெல்லாம்
குதிரையாக்கியது கூறியபின் தாம் தவஞ்செய்து சிவாய நம
எனப் பெற்றதை யறிவித்தனர். திருப்புலம்பலுள் இறைவன்
திருவடி யன்றித் தாம் வேறொன்றும் புகழ்வதில்லை என்றும்
இடையறாத அன்பு ஒன்றேதாம் வேண்டியதெனவுங் குறிப்
பித்தார். பிடித்தபத்தினுள் பிறப்பிறப்பு மயக்கம் துன்ப
மென்பவற்றின் தொடர்பெல்லா மொழித்த இறைவனைத்

தாம் இடைவிடாது சிக்கெனப் பிடித்ததாகக் கூறினர்.* திருவெம்பாவையுள் மார்கழி நீராடலை விதந்தனர். திருக்கழுக்குன்றப் பதிகத்தில், உணக்கிலாததோர் வித்து மேல் விளையாமல் தன் வினையொத்தபின் கணக்கிலாத் திருக்கோலம் இறைவன் தமக்குக் காட்டியதும், ஞாலமே கரியாகத் தாம இறைவனை நச்சியதும், இறைவன் தமக்குப் பேதமில்லதோர் கற்பளித்ததும் விதந்தனர்.

அடிகள் தில்லையுட் சென்றவுடன் பாடிய பதிகம் கண்ட பத்தாக விருத்தல் கூடும். அதனுள் உருத்தெரியாக் காலத்தே உள் புகுந்து உள மன்னிக் கருத்திருத்தி ஊன் புகுந்தமையும், பல்லோருங்காணத் தம பசுபாச மறுத்தமையும, சாதி குலம பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறுந் தம்மை யாட்கொண்டமையும், பித்தனிவனெனத் தம்மை யாக்குவித்துப் போமே சித்தமென்னுந் திண்கயிற்றாற றிருப்பாதங் கட்டுவித்தமையும், அளவிலாப் பாவகத்தால் அமுக்குண்டு அறிவின்றி நின்ற நிலைமைய மாற்றினமையுமா அடிகளியம்பினர். குலாப்பத்தினுள் ஓடுங்கோவணமுமே உறவாகச் சிவன் கழலே நாடி நின்ற தமது துறவு நிலைமையையும், தமது ஆனந்தக் கூத்தினையும, துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மை செய்தமையும், செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்யுந் தமது இம்மைப் பயனாக தில்லையின் கண்ணே ஒழிந்து விடுவா னென்பதையுங் குறிப்பித்தார்.* திருவண்டப்பகுதியுள் தேவருமறியாச் சிவபெருமான் புவனியிற் சேவடி தீண்டித் தம்மை யாட்கொண்டருளினமையும், பிச்சேற்றினமையும், தமது அவயவத்தைக் கோல் தேன் கொண்டு செய்தமையும், சொல்ல முடியாத ஆனந்த அமுதத்தை மயிர்க்கால் தோறும் எலும்புத் துளைதோறும் தேக்கிடச் செய்தமையும், உள்ளத்தை இன்ப ஊற்றாக்கின

மையும், அடியார்களை யெல்லாம் அருட்பெருந் தீயின் வழாமை யொடுக்கினமையுங் குறிப்பித்தமை காண்க. போற்றித் திருவகவலுள் 'கடையே னடிமை கண்டாய் போற்றி' 'என்னையுமொருவனாக்கி யிருங்கழல் சென்னியில் வைத்த சேவக போற்றி' 'பரகதி பாண்டியற்கருளினை போற்றி' 'பிழைப்புவாய்ப் பொன்றறியா நாயேன் குழைத்த சொன் மாலை கொண்டருள் போற்றி' என்பன அடிகள் சரித்திரச் சார்பானவை. திருப்பொற் சுண்ணத்தில் அடியார்கட்கு அறிவுரையாக 'வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள் கூவுமின் தொண்டர் புறம் நிலாமே, குனிமின் தொழுமின்' நறுமுறுதேவர் கணங்களெல்லாம் நம்மிற்பின் பல்லது எடுக்க வொட்டோ மென்றமை காண்க. திருக்கோத்தும்பியுள் 'நானாரென்னுள்ள மார் ஞானங்களா ரென்னை யாரறிவார் வானோர் பிரான் என்னை யாண்டிலனேல்' 'எப்போதும் அனந்தத் தேன் சொரியுங் குறிப்புடையான்,' 'கண்ணப்பனொப்பதோர் அன்பின்மை கண்டபின் என்னப்பனென்னையுமாட்கொண்டருளி' 'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை,' 'வானால வரவர வந்தொழிந்தான் என் மனத்தே' என்ற அடிகள், அடிகளின் அனுபவத்தை விளக்குவன. அவ்வாறே திருத்தெள்ளேணத்துள் 'உரு நாமறிய வோரந்தணனாய் யாண்டு கொண்டான்' 'திருவார் பெருந்துறை மேயபிரானென் பிறவிக் கருவேரறுத்த பின் யாவரையுங் கண்டதில்லை'

'அரிகரும் பிரமற்கு மல்லாத தேவர் கட்குந்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
யுருக்கும் பணிகொள்ளு மென்பதுகேட் டுலகமெல்லாஞ் சிரிக்கும்'

'ஆவா அரிஅயன் இந்திரன் வானோர்க்கரிய சிவன்
வாவாவென் றென்னையும் பூதலத்தே வலித்தாண்டுகொண்டான்'

'சாநகோலை போல்வதோர் காயப்பிறப்போ டிறப்பென்னும்
அறம்பாவ மென்றிரண் டச்சந் தவிர்த்தென்னை ஆண்டுகொண்டான்'

'அடியேனை யாட்கொண்டு
பத்திக்கடலுட் பதித்த பரஞ்சோதி'

'உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாஞ்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறுங்
கவலைக் கெடுத்துக் கழலிணைக டந்தருளுஞ்
செயலைப் பரவிநாந் தெள்ளேணங் கொட்டாமோ'

'ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ'

என்னும் அடிகள், இறைவன் அடிகளை நேரில் ஆட்கொண் டருளியதற்கு அகச் சான்றுகளாகும். திருப்பூவல்லியுள் 'இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே துணையான சுற்றங்க ளத்தனையுந் துறந்தொழிந்தேன்' என்ற அடிகள், அடிகளது துறவுநிலையைக் குறிப்பன. திருத்தோணோக்கத்துள்,

'புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயந்
தத்தம் மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினாற் றோணோக்க மாடாமோ'

'ஊழிமுதற் சிந்தாத நன்மணி வந்தென்பிறவித்
தாழைப் பறித்தவா தோணோக்க மாடாமோ'

என்னுந் திருப்பாட்டுகள் அடிகளது அநுபவத்தை விளக்கு வன. திருப்பொன்னூசலுள் 'நாண் மலர்த்தாள் நாயடி யேற்கு ஊராகத் தந்தருளும், தந்தெனக் கருளித் தன்

கருணை வெள்ளத்து மகாஞாய மன்னும்' 'ஞாலமிகப் பரி மேற்கொண்டு நமையாண்டான்' என்பனவும் அன்னைப் பத்தினுள் 'உள்நின் றுருக்கி யுலப்பிலா ஆனந்தக் கண்ணீர் தருவரால், பாண்டி நன்னாடர் பரந்தெழு சிந்தையை ஆண்டன்பு செய்வரால், என்னுமடிகளும் அத்தன்மையனவே.

ஆனந்தமாலை யுள்ளும் கோயில் மூத்த திருப்பதிகத் துள்ளும் எண்ணப் பதிகத்துள்ளும் தில்லையுட் காததிருந் தும் வீடுவிரைவில் இறைவன் அருளவில்லையே என்று அடிகள் வருந்திய குறிப்புக்கள் காணப்படும்

" கன்னேரனைய மனக்கடையாய்க் கழிப்புண்டவலக்கடல் வீழ்ந்த
வென்னேரனை யேனினியுன்னைக் கூடும்வண்ணமி யம்பாயே"

" கோலங்காட்டி யாண்டானைக் கொடியே னென்றோ கூடுவதே"

" தேவே தில்லைநடமாடீ திகைத்தே னினித்தான் தேற்றாயே"

" முகந்தான் தாராவிடின் முடிவேன்
பொன்னம்பலத் தெம்முழுமுதலே"

" அரைசே பொன்னம்பலத்தாடு மமுதே யென்றுன் னருள்நோக்கி
இரைதேர் கொக்கொத்திரவு பகலே சற்றிருந்தேவே சற்றேன்"

" இரங்கு நமக்கம்பலக் கூத்தனென் றென்றே மாந்திருப்பேனை
அருங்கற்பனை கற்பித்தாண்டா யாள்வாரிலி மாடாவேனோ"

" பல்காலுன்னைப் பாவித்துப் பரவிப் பொன்னம்பல மென்றே
ஒல்கா நிற்கு முயிர்க் கிரங்கி யருளாயென்னை யுடையானே"

" பெரியோ னொருவன் கண்டுகொ ளென்றுன் பெய்கழலடிகாட்டிப்
பிரியே னென்றென் றருளியவருளும் பொய்யோ வெங்கள்பெரு
[மானே"

" பத்திலனேனும் பணிந்திலனேனும்
உன்னுயர்ந்த பைங்கழல்காணப்
பித்திலனேனும் பிதற்றிலனேனும்
பிறப்பறப்பா யெம்பெருமானே
முத்தனையானே மணியனையானே
முதல்வனே முறையோவென்
றெத்தனையானும் யான்தொடர்ந்துன்னை
யினிப்பிரிந்தாற் றேனே "

திருப்படை யாட்சியுள் 'எண்ணரியியாகிய சித்திகள் வந்தெனை எய்துவதாகாது எல்லையிலாதவை எண்குணமானவை எய்திடுமாகாது' என்றமையால் வீடுபெறுதற்கு முன்னே அடிகள் அவைகளையுடையராயினா ரென்பது ஊகிக்கப்படும். திருப்படை யாட்சியுள் இறைவனோடு உயிர் இரண்டறக் கலந்து பேரின்பம் நுகருங்கால் பிற நினைவுகளனைத்து மின்மையை இனிதுரைத்தனர் திருப்படை யெழுச்சியால் தொண்டர் பத்தர் சித்தர் யோகிகள் யாவர்க்கும் அடிகள் தலைவராந் தன்மை யறியக்கிடந்தது. ஞானத்தின் ஞானத்தினைத் தலைப்பட்டு அநுபவாதீதமுற்ற அடிகள் யாத்திரைப் பத்தினுள் அடியார் யாவரையும் தாம் பெற்ற பேரின்ப நிலைக்கு விரைந்து வருமாறு அறிவுரை பகர்ந்தருளிய அருட்டிறங் காணப்படும். அது பின் வரும் அடிகளா லறியப்படும்.

" போவோங் காலம்வந்தது காண்பொய்விட்டுடையான்
கழல்புகவே "

" புரள்வார் தொழுவார் புகழ்வாராயின் றேவந் தாளாகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார் மதியுட் கலங்கி மயங்குவீர்
தெருள் வீராகி விதுசெய்மின் "

“விடுமின் வெகுளி வேட்கைநோய் மிகவோர் காலமினியில்லை
டையான டிக்கீழ்ப் பெருஞ் சாத்தோடுடன் போவதற்கே
யாருப்படுமி, னடைவோ நாம்போய்ச சிவபுறத்து ளணியாகத
தடையாமே, புடைபட்டுருகிப் போற்றுவோம் புயங்களுழ்வான்
கழ்களையே.”

நிற்பார் நிற்க நில்லா வுலகினில் லோமினி நாஞ் செல்வோமே
பாற்பா லொப்பாந திருமேனிப் புயங்கனுள் வான் பொன்னடிக்கே
ற்பீ ரெல்லாந் தாழாதே நிற்கும்பரிசே யொருப் படுமின்
ற்பால் நின்று பேழகணிததாற் பெறுதற் கரியன் பெம்மானே.’

திருவாசகப் பொது ஆராய்ச்சியும் மாணிக்கவாசக பாமிகள் காலததைப்பற்றிய குறிபபும ‘மாணிக்க வாசக பாமிகள் வரலாறும நூலாராய்ச்சியும’ என்ற நூலிற் ாடு கொள்க.



# பதிகவகராதி







# திருவாசகப் பெருமை



### நேரிசை வெண்பா

வள்ளுவர்நூ லன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை—யொள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகைச்சித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாந் தரம். (௧)

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர். (௨)

### நேரிசை யாசிரியப்பா

விளங்கிழை பாகத்து மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ
வாதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்
வேத மோதின் விழிநீர் பெருகி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேந்
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே. (௩)

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள
மூழ்கிய புனிதன மொழிந்தவா சகமே
வாசக மதற்கு வாசியந்
தாசணி நுண்மருங் குற்றே ரிடையிடத் தவனே. (௪)

வலமழு வுயரிய நலமலி கற்கை
நதிக்கலை சோர்ந்த நறுங்கரு ணைக்கடன்
முகந்துல குவப்ப வுகந்தமா ணிக்க
வாசக னெனுமொரு மாமழை பொழிந்த
திருவா சகமெனும் பெருநீ ரொழுகி
யோதுவார் மனமெனு மொண்குளம் புகுந்து

காவெனு மதகி னடந்து கேட்போர்
செவியெனு மடையிற் செவவிதிற் செல்லா
வுளமெனு நிலம்புக வூன்றிய வன்பாம்
வித்திற சிவமெனு மென்முளை தோன்றி
வளாநது கருணை மலர்ந்து
விளஙகுறு முத்தி மெய்ப்பயன் றருமே. (ரு)

நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ!
மனநின் றருகசு மதுர வாசக!
கலஙகுறு புலநெறி விளஙகுறு வீர!
திங்கள் வாாசடைத் தெய்வ நாயகன்
ஒருகலை யேனு முணரா னெஃதானறு
கைகளோ முறிபடுங கைகள் காணிற்
கண்களோ வொன்று காலையிற் காணு
மாலையி லொன்று வயஙகித தோன்றும
பழிப்பி ஞென்று விழிப்பி னெரியு
மாயினுந் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செயயு ளெழுதின னதனாற்
புகழ்ச்சி விருப்பன் போலு
மிகழ்சசி யறியா வெண்பணி வானே (சு)

திருவாா பெருநதுறைச செழுமலா குருந்தி
னீழல்வா யணட நிகரிலா னந்தத
தேன்றேக் கெறியுஞ் செய்யமா ணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம
யாவரு மோது மியற்கைத் தாதலிற்
பொறகல நிகாகரும் பூசுரா நான்மறை
மட்கல நிகாகரு மதுர வாசக
மோதின முததி யுறபயன்
வேத மோதின மெயப்பய னறமே (எ)

செய்ய வாாசடைத் தெய்வ சிகாமணி
பாதம போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப
பூவெனப் படுவது பொறிவாழ பூவே (அ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

மாசறு மணிபோற் பன்னூள் வாசக மாலை சாத்திப்
பூசனை செய்து பனனூட் புண்ணிய மன்றுளாடு

நீசன தடிக்கீ ழெய்தி யீறிலா வறிவா னந்தத்
தேசொடு கலந்து நின்றார் சிவனருள் விளக்க வந்தார். (௯)

---

# திருவாசக உண்மை

## சிவபுராணம்

தேசுறுமா ணிக்கமெனச் சிறந்ததிரு வாசகத்திற்
பேசுதிருச் சிவபுரா ணத்ததவற் பெருமை சொலி
லீசாதம கியல்பான திருநாம முதலெலவையு
மாசறவே வாழ்கவென வாழ்த்துகின்ற வருட்குறிப்பாம். (௧)

## கீர்த்தித்திருவகவல்—திருவண்டப்பகுதி

புகழ்பெருகுஞ் செய்கையெலாம் புகலகவ லொன்றாகுந்
திகழ்திருவண் டப்பகுதித் திருவகவல் செப்பியது
தகுசிருட்டி திதியொடுக்கஞ் சாற்றுதிரோ தமபொதுவா
யகலமுறத் தோற்றிடவே யருளியநற் பொருளாகும். (௨)

## போற்றித்திருவகவல்—திருச்சதகம்—நீத்தல்விண்ணப்பம்

முத்திபெறு நெறியறியு மொழிபோற்றித் திருவகவல்
சத்தியஞா னந்தருதே சிகாமோகஞ் சதகமதா
மித்தையுல கினையகற்றி விடாமலெனை யாண்டருளென்
றத்தாறிந திடநீத்தல் விண்ணப்ப மறைந்ததுவாம். (௩)

## திருவெம்பாவை—திருவம்மானை

மலவிருளுற் றுறங்காமன் மன்னுபரி பாகாருட்
செலமுழுக வருகவெனச் செப்பறிரு வெம்பாவை
நலமுறுமந் தணர்வடிவாய் நாரணன்காண் பரியபத
நிலமதில்வந் தாள்கருணை நினைந்தாட லம்மானை. (௪)

## திருப்பொற்சுண்ணம்—திருக்கோத்தும்பி

சத்திகளாற் றனுகரண புவனபோ கங்கடமை
யததனுகருச் சுண்ணமவை யாயிடிக்கக் கூவுதலே
யொத்ததிருச் சுண்ணமுயர் போதமொரு வண்டாகச்
சித்தவிகா ரத்தூது செப்பிவிடல் கோத்தும்பி. (௫)

## திருத்தெள்ளேணம்—திருச்சாழல்

பொன்றாமெய் யணைவரும் போதவின்ப மேமிகுந்து
தெனாதென் னாவெனவே தெள்ளேணங் கொட்டியதா
முன்றா கலையுமுண ராமூகை யாமேடி
தன்றற் பதிமுதன்மை சாற்றியதாந் திருச்சாழல். (௬)

### திருப்பூவல்லி—திருவுந்தியார்

தேவாறி யாதகிவன் றேடிய யாண்டநல
பாவமொடுஞ் சொல்லி யடியாரோ டுஙகூடிப்
பூவிந்து கொய்தறிருப் பூவல்லி யாமரன்சீா
– வூறு தீமையறப் பாடறிரு வுந்தியதே (எ)

### திருத்தோணோக்கம்—திருப்பொன்னூசல்

சித்தஞ் சிவமாக்கிச செய்தனவே புண்ணியமா
யத்தன் செயுஙகருணை காராமை யுண்மிகுநது
பொத்திய கைகொட்டிப் புகழ்தறோ ணோககமருட்
சத்தியிருந் தாடத்தா லாட்டிடுதல் பொனனூசல. (அ)

### திருவன்னைப்பத்து—குயிற்பத்து

நேயம்மி குந்த நிலைகுலையக கூடுதலை
யாயவருட் டாய்ககங கறைதலன்னைப் பத்தாகுந
தூயவருட் குயிலேநற் சோதியெனைக கூடுதற்குன்
வாயினுற் கூவெனமுன வாழ்ததல்குயிற பத்தாமே. (கூ)

### திருத்தசாங்கம்—திருப்பள்ளியெழுச்சி

பேர்நாடு ராறுமலை பெயருாதி படைமுரசு
தார்கொடியெ லாமரற்குச சாற்றறசாங கமதா
மோமரு திருப்பள்ளி யெழுசசிபணி விடைகேட்
டாாவமுட ஞணடவரற் கன்புசெயு மியல்பே (கo)

### கோயின்மூத்ததிருப்பதிகம்—கோயிற்றிருப்பதிகம்
### செத்திலாப்பத்து—அடைக்கலப்பத்து

கோயின்மூதத திருப்பதிகஞ் சிதம்பரத்தி லருளடையுங குறிப்பதாகு. மேயுஙகோயிற் றிருப்பதிகம் பெருநதுறைத தேசிகா மோகமியம்பலாகு, மாய பசுபோ தம்முற்றங கெடவேண்ட லேசெததி லாப்பத தாகு, மோதுவலவா தனைகள் வநதணுகாம லடைககலப்பத துரைததாமே. (கக)

### ஆசைப்பத்து—அதிசயப்பத்து

கருவியுறு மூனுடற்கண் வாராமற் றிருவருளிற் கலப்ப தற்கே, யரனடியைப் புகழ்ந்துபெரு காவமொடு பாடுதலே யாசைப் பத்தாம், வெருவிமலத தினைசசிலத் தொன்றுகு மடியாகுழாத் துடனே கூட்டும், பரமாருட் பெருமைமிகு தியைப்புகழ்ந்து பாட லதி சயப்பத்தாமே. (கஉ)

புணர்ச்சிப்பத்து—வாழாப்பத்து

ஆண்டகுரு வைப்பிரிந் தலைந்துபுணர்
 யுரிந்துமிகு மன்போ டின்பம்
பூண்டிடக்கப் பெறுவ தென்றுகொலோ
 வெனும்விருப்பம் புணர்ச்சிப் பத்தாம்
நீண்டவுல கத்தினிற்பற் றொன்றிலே
 னிவணுடற்க ணின்று வாழேன்
மாண்டகுநின் பதநிழற்கீழ் வருகவருள்
 புரியெனுஞ்சொல் வாழாப் பதத்தே. (கங)

அருட்பத்து—திருக்கழுக்குன்றப்பதிகம்

சோதியருட் சுடர்விளக்கே தூயாப்பிறவி
 கூடல்விடுத் தென்னாள் சோதற்
காதரித்திங் குனையழைத்தா லதெந்துவெனக்
 கேளெனுஞ்சொ லருட்பத் தாகு
நீதிமறை பரவு திருப்பெருந்துறையிற்
 குருவடிவாய் நிகழ்ந்த கோலங்
காதலொடுங் காட்டினையே யெனுங் களிப்புப்
 பகர்திருக் கழுக்குன் றமே (கச)

கண்டபத்து—பிரார்த்தனைப்பத்து

இந்திரிய வயமயங்கா தேயெடுத்துத்
 தாளுக்கு மெழிலா னந்தங்
கந்தமலி தில்லையினுட் கண்டேனென்
 றுவந்துரைத்தல் கண்ட பத்தா
மந்தமிலா வானந்தத் தகலாம
 லெனையழுத்தி யாள்வா யென்று
சிந்தைகலந் துரைத்ததுவே பிரார்த்தனைப்பத்
 தாய்ப்புகலுஞ் செய்கையாமே. (கரு)

குழைத்தபத்து—உயிருண்ணிப்பத்து

இழைத்தேனிவ் வாக்கைபொறுத் தினிக்கணமும்
 பொறுக்கலே னேழை யேனைக்
குழைப்பதேன் பிழைபொறுத்தா ளெனவிரங்கிக்
 கூறுதலே குழைத்த பத்தாந்
தழைத்துவளர் பேரின்பந் தானாகி
 யுயிர்தோன் றாத் தன்மை யாய்த்துன்

பொழித்துநிறை வைப்பெறுத லுயிருண்ணிப்
பத்தாவிங் குரைத்த தாமே. (௧௬)

அர்ச்சனைப்பத்து—திருப்பாண்டிப்பதிகம்

தரையில்வளர் வினைமுழுதும் வரினுமஞ்சேன்
சிவசமயத் தவஞ்சா ராதா
ருகின்வரக் காண்கின்மன மஞ்சுமென
விகழ்ந்துரைத்த லச்சப் பத்தாம்
புரவியின்மேற் பாண்டியன்முன் வரும்பதத்தை
யாம்பெறமற் பதம்போல் யாரும்
விரவுமின்க ளென்றடியாகக் குறித்துசொல
திருப்பாண்டி விருத்த மாமே. (௧௭)

பிடித்தபத்து—திருவேசறவு

மிக்கபிற வித்துயரை லாமொழித்து
விபுத்துவமிங் களித்த லாலே
சிக்கறச்சிக் கெனப்பிடித்தே னின்னையென்று
துணிவுசெப்பல் பிடித்த பத்தாந்
தக்கபரி யாய்நரியை யாக்குதல்போ
லெனைப்பெரிதாய்த் தாக்கித் தாட்கீ
ழுக்கணமவைத் தனையேயென றிரங்கறிரு
வேசறவென் றியம்ப லாமே (௧௮)

திருப்புலம்பல்—குலாப்பத்து

கரைந்துருகும் பேரன்புன் கழலிணைக்கே
கற்றாவின் மனம்போ லென்றுந்
திருந்துமவகை யெனக்கருள்க வெனக்கேட்ட
றிருப்புலம்ப லாகு முள்ளம்
விரும்புசிவா னந்தவெள்ளம் விளைந்துதில்லை
நாயகனை மிக்ககொண் டாடி
நிரம்புமனக் களிமிகுத்த விறுமாப்பே
குலாப்பத்தாய் நிகழ்த்த லாமே. (௧௯)

அற்புதப்பத்து—சென்னிப்பத்து

மாயவுருக் கொண்டுளத்தை மயக்குமின்னா
கண்வலையுண் மயங்கு வேற்கிங்
காயுமறி வளித்தாள லதிசயமென்
றுரைத்தலற்பு தப்பத் தாகுந்

தூயவருட் குருபதத்தைச சூட்டுதற்குப்
பெற்றவுயர் சுகத்தை நோக்கிச
சேயமலர்ப் பதத்தருமை யடியரொடும்
வியந்துரைத்தல் சென்னிப் பத்தே (உ0)

திருவார்த்தை—எண்ணப்பதிகம்

அறம்பெருகும் பெருந்துறையிற் றமையாண்ட
செயன்முதலா வரன்சீ ராட்டின்
றிறமறிவா ரெம்பிரா னாவரென
வுரைத்ததிரு வார்த்தை யாகு
நிறம்வளரு மலர்ப்பொழில்சூழ்ந் தோங்குதிருத
தில்லைமன்று ணிமல னாமத
திறம்பெருகு மின்பமரு ளென்றமெலணணப்
பத்தெனவுந திகழுத்த லாமே (உக)

யாத்திரைப்பத்து—திருப்படையெழுச்சி

பொல்லாத பவத்தைவிட்டு சிவனகழற்கீழ்ப்
புகுககாலம் புணாந்த தெற்கிய
செல்லாரும் வாருமெனக் கருணையினு
லழைத்திடல்யாத திரைப்பத தாகு
மல்லாத தூகருணமா யப்படைகள்
விளையாம லருள்வா ளோநதி
நல்லோரா ஙியாருமெம்மோ டெய்துமெனப்
படையெழுசசி நவிற லாகும் (உஉ)

திருவெண்பா—பண்டாய நான்மறை

தொந்தமா மலமொறததுச சுகம்பெருககிப்
பெருநதுறைவாழ சோதி யென்றன்
சிந்தையே யூராகக கொண்டிருநதா
ரென்றுரைத்த திருவெண் பாவா
மெந்தைதிருப் பெருநதுறையை யேததுநம
ரேவாழவுற் றிடாசோ பாச
பந்தமறத திடுவரெனப் பண்டாய
நான்மறையும் பகர்ந்த தாமே. (உ௩)

திருப்படையாட்சி—ஆனந்தமாலை—அச்சோப்பதிகம்

வாகுதிருப் பெருந்துறையா ரெழுந்தருளப்
பெறிலெல்லா ஸளஙகசண் முற்று

மாகுமெமக் கல்லாத தாசாதென்
றியம்பல்படை யாட்சி யாகு
மோகமிகு மடியரொடும் கூடவிரும்பிய
தானந்த மொழியு மீசர்
போகசுக மெனக்களித்தா ராரெபெறுவா
ரெனுமருமை புகற லச்சோ (உ௭)

## திருப்பதிகங்களின் பெயரும் தொகையும்



சிவபுரா ணங்கீர்த்தி திருவண்டப் பகுதி
திருப்போற்றி யுடனாவ திருச்சதக நூறு
நவநீத்தல் விண்ணப்ப மைம்பதாம் பாவை
நலந்திகழு மம்மானை நல்பொற் சுண்ணம்
புவனமகிழ் கோத்தும்பி திருவாதெள் ளேணம்
பொருவரிய திருச்சாழல் பூவலி யுந்தி
யிவையிருப தாமீரே ழாகுந்தோ ணோக்க
மெழிற்பொன்னூ சலுமேயான பாவென்ப விவையே. (௧)

திருவன்னை குயிற்பத்துத் திருத்தசாங்கம்
திருப்பள்ளி யெழுகோயின் மூத்ததிருப் பதிக
மருட்கோயிற் றிருப்பதிகஞ் செத்திலடைக் கலமே
யாசையதி சயம்புணர்ச்சி வாழாப்பத் தருட்பத்
தொருபதென வுரைசெயவா சகக்குன்ற மேழா
முயாபிராத் தனைகள்பதி னொன்றாகுங் காண்பத்
திருமைபெறுங் குழைத்தபத்து துயிருண்ணி யச்ச
மெழிற்பாண்டி பிடித்தபத்தெ ட்டேசறவு பத்தே. (௨)

திருப்புலம்பன் மூன்றாகுலா வறபுதமே சென்னி
திருவார்த்தை பத்தெண்ணப் பதிகமொரு வாறும்
பாற்குரிய யாத்திரைப்பத் தொருபதா மற்றைப்
படையெழுச்சி யிரண்டாகும் பதினொன்றாம் வெண்பா
வருட்டவழும் பண்டாய நான்மறையே யாகும்
வலியபடை யாட்சியெட் டானந்த மேழா
மருட்பெறுமச் சோவொன்ப தைம்பதொன்றாம் பதிக
மகவலொடு செய்யுளறு நூற்றைம்பத் தெட்டே. (௩)

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவாசகம்

திருப்பெருந்துறையில் அருளிய

## சிவபுராணம்

### சிவனது அநாதி முறைமையான பழமை

**கலி வெண்பா**

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க

(க) திருவாசகம் என்ற சொற்றொடர், அழகிய மொழி யென்று பொருள்படும். அதாவது, வீடு விரும்புவாரது உள்ளத்தைக் கவரும் பெருமையுடைய அருட்பாடல்களாலாகிய நூல் என்பதாம். அழகு - கண்டாரால் விரும்பப்படுந் தன்மை.

(உ) திருவாசகம் - வீடளிக்கும் அருண்மொழி நூல். திரு - வீடு.

சிவபுராணம் - சிவனைப்பற்றிய பழைய வரலாறு. அதாவது மன்னுயிர்களை உய்வித்தற் பொருட்டுச் சிவபெருமான் அளவில்லாத காலமாக இயற்றி வரும் பழமையான திருவருட்செயல் முறையைக் கூறும் பகுதி என்பதாம்.

**உரை** —(தலைவனது பெருமையை யுணர்த்தும் நாமமாகிய) நமச்சிவாய வென்னுந் திருவைந்தெழுத்தானது என்றும் நிலைபெறுக. தலைவனது திருவருட் சத்தியானது என்றும் விளங்குக. கண்ணைமூடி விழிக்கும் நேரமளவுங்கூட அடியேனுடைய உள்ளத்தைவிட்டு அகலாதவனுடைய திருவடிகள் வாழ்வனவாக. திரு

கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
௫ ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க

வாவடுதுறை அல்லது திருப்பெருந் துறையில் எழுந்தருளி (அடியார்க்கு மெய்யுணர்த்தி) ஆட்கொண்டருளிய தலைமையருட் பேராசிரியராகிய முதல்வனின் திருவடிகள் என்றும் விளங்குக. வீட்டுநூல் கூறும் தனிப்பொருளாய் நின்று இனிமை தருவானுடைய திருவடிகள் (உள்ளத்தில்) என்றும் நிலைபெறுக. (தனக்கிணையில்லா) ஒருவனும், (அன்பர் நினைக்கும்) பல வடிவமுடையவனுமாகிய (உலகுயிர்களுக்குத்) தங்குவானுடைய திருவடிகள் என்றும் பொலிவு பெறுக.

**குறிப்பு** — "நமசிவாய" என்னுஞ் சொற்றொடர் வடமொழியில் "வணக்கம் சிவனுக்கு" என்று பொருள்படும். நமஸ் - வணக்கம். சிவாய - சிவனுக்கு. சித்தாந்த நூல் முறைப்படி, "நமசிவாய" என்பதற்கு எழுத்துப்பொருள் கொள்ளுமிடத்து, **நகரம்**, உயிர்கள் **உலகியலிற்** செல்லுதற்குத் துணை புரிந்து நிற்கும் கடவுளது மறைப்புச் சக்தியைக் குறிக்கும். **மகரம்**, மலமாகிய உலக பாசத்தைக் குறிக்கும். **சிகரம்**, சிவமாகிய கடவுளைக் குறிக்கும். **வகரம்**, வீடடைதற்குத் துணைபுரியும் அருட்சக்தியைக் குறிக்கும். **யகரம்**, உயிரைக் குறிக்கும். ஆணவத்துட் கிடக்கும் உயிரினைப் பிறவிக் கட்டினுட்படுத்தி, உலகியலிற் செலுத்தியும், ஆணவம் நீங்குதற்குரிய பக்குவம் வந்தபோது, கட்டுக்களை யொழித்து அருட்சக்தி வாயிலாகத் தன்பால் வீடு பெறுவித்தும், உயிருக்கு நன்மை புரியுங் கடவுளின் பெருந்தன்மையை ஐந்தெழுத்து விளக்குதலால், "நாதன் நாமம் நமசிவாய" வெனப்பட்டது. நாதனை அவன் நாமத்தால் வழுத்தியபின், நாதனது சத்திக்கு வாழ்த்துக் கூறப்பட்டது. "நமசிவாய" என்பதைப் பரிய ஐந்தெழுத்து (தூல பஞ்சாக்கரம்) எனவும், "சிவாயநம" என்பதை நுண்ணிய ஐந்தெழுத்து (சூக்கும பஞ்சாக்கரம்) எனவுங் கூறுப. கட்டுநிலையை நமசிவாய வென்பதும், வீட்டுநிலையைச் சிவாயநம என்பதுங் குறிக்கும்.

வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
௧௦ சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க

நாதன், என்பதற்கு நாததத்துவ முதல்வனென்று பொருள் கொள்ளுவாருமுண்டு. தாள் - அருளாற்றல், இமைத்தல் - இயற்கையாகக் கண் மூடி விழித்தல் இமைப்பொழுது, மிகச் சிறிய கால அளவைக் குறிக்கும். கோகழி - பசுத்தன்மை கழிதல் இப்பொருளில் அது திருவாவடுதுறையைக் குறிக்கும். கோ - பெரிய, கழி - துறை இப்பொருளில் அது திருப்பெருந் துறையைக் குறிக்கும் அடிகள் காலத்திற்கு முன்னமே, நவகோடி சித்த புரமென்னும் திருவாவடு துறையிலே, இறைவன் பலர்க்கு அருள் புரிந்திருத்தல் கூடும். கோகழி, இத்திருப்பதிக்கே பெருவழக்கான பெயர். திருப்பெருந்துறை யென்ற பொருள், அடிகள் வரலாற்றிற்கு மிகவும் பொருத்தமானது. மணி - மாணிக்கம் அது இரத்தினங்களுட் சிறந்ததாதல் பற்றித் தலைமையையுங் குறிக்கும். ஆகமம் - ஆகமப் பொருள் ஆகமம், வீட்டு நூலாதலின் கடவுள், ஆகமப் பொருளாயினமை கூறினர். "அண்ணிப்பான்" என்பதற்கு அணுகி நிற்பானென்று பொருள் கொள்வாருமுளர். இறைவன், "இறு" என்பதனடியாகப் பிறந்தது, இறு - தங்கு.

**உரை** (௬-௧௦) :—(உய்தி கூடுதற்கு அருட்குரவனை நாடி யலையாத மனத்தின்) விரைவைத் தொலைத்துத் (திருவருள் தந்து) ஆட்கொண்ட மன்னனது திருவடிகள் மேம்படுக. பிறவியை வேரறுக்கவல்ல தலைக்கோலப் பெருமானுடைய வீரச் சிலம்பு நிறைந்த திருவடிகள் சிறந்து விளங்குக. (அன்பிற்குப்) புறமாயுள்ளவர்கள் (அணுக வொண்ணாத) தூரத்திலுள்ளவனுடைய அழகிய மெல்லடிகள் வெற்றியுடன் திகழ்க. கைகூப்பித் தொழுவார் தமது நெஞ்சத்தில் (நினைந்து நினைந்து) களிப்படைதற் கேதுவாகிய அரசனுடைய திருவடிகள் (நிலை பெற்றுச்) சிறக்க; தலை

ஈச னடிபோற்றி எந்தையடி போற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி
௧௫ சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத வின்பம் அருளுமலை போற்றி

குவித்து வணங்குவாரை மேன்மை யடைவிக்கும் புகழுடையானது திருவடிகள் வெற்றியுடன் மிளிர்க.

**குறிப்பு** (௬-௧௦) —வேகம் - விரைவு. பிஞ்ஞகம் - தலைக்கோலம் பிஞ்ஞகம் - பின்னகம - பின்+நகம் (தலையின்) பிற்பகுதியில் விளங்கும் அணி. இறைவனுக்குப் பிறை அவ்வணியாகு மென்ப "பெய்கழல" என்பதில், "பெய்" மிகுதியாகச் சாத்தப்படுதலைக் குறிக்கும். இறைவனது ஒப்பற்ற வெற்றிச் செயல்களைக் கண்ட விண்ணவரும் வீர அன்பர்களும் அவன் திருவடிகளை கழல்களைச் சாத்தினமை குறிப்பித்தவாறும். கழல், திருவடிக்கு ஆகுபெயர் உள் - உள்ளம் கரங்குவித்தல் பெரும்பாலும் நெஞ்சிற்கு நேரே புறத்து நிகழ்தலின், அது அகமகிழ்வின் விளைவாயிற்று சிரம், உயர்ந்த உறுப்பாகலின், ஓங்குவித்தல், சிரங்குவிதலின் பயனாகக் கூறப்பட்டது

**உரை** (௧௧-௧௬) —ஆண்டவனுடைய திருவடிகள் (நம்மைக்) காப்பனவாக, நமது அப்பனுடைய திருவடிகள் காக்க, ஒளி மேனியனுடைய திருவடிகள் காக்க, மங்கலப் பொருளாகிய சிவபெருமானுடைய செவ்விய பாதங்கள் காப்பனவாக, அன்பிலே விளங்கி நின்ற மாசிலாதவன் திருவடிகள் காக்க; வஞ்சப் பிறவியை வேரறுக்கும் வேந்தன் திருவடிகள் காக்க, அழகு நிரம்பிய திருப்பெருந் துறையில் வீற்றிருந்த நமது இன்பன்றிருவடிகள் (நம்மைக்) காக்க; தெவிட்டாத இனிமையை (ஆருக) நல்கும் மலைபோலும் பெருமான் (நம்மைக்) காக்க.

**குறிப்பு** (௧௧-௧௬) —ஈசன், ஆளுதல் என்று பொருள்படும் வினையடியாய்ப் பிறந்தது தேசு - ஒளி நிமலன் - மலமில்லாது

சிவன் அவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
உ0 முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழல்இறைஞ்சி

வன் மாயம் - வஞ்சனை, நிலையாமை. எடுத்த, பிறவி நிலையாமையானும், வரும் பிறவி யாதென்றறியப் படாமையானும் " மாயப்பிறப்பு " என்றார். தேவன் - தே+அன் - இனிமையன், தேவன் என்னுஞ் சொல் வடமொழியிலே ஒளியுருவினன் என்று பொருள்படு மென்க. ஆராத - உண்டு நிரம்பாத, ' மலை ' என்றமையால், உரையுள், இன்பம், ஆறெனப்பட்டது.

**உரை நடை** (கஎ - உஉ) —உக, உஉ - வது அடிகளை கஎ, கஅ - வது அடிகளின் பின் சேர்த்துக்கொள்க சிந்தை மகிழ, முந்தை வினை முழுதும் ஓய, யான் சிவபுராணந்தன்னை உரைப்பன்.

**உரை** (கஎ - உஉ) '—சிவபெருமானாகிய முழுமுதற் கடவுள் எனது நினைவின் கண் நிலைபெற்றிருந்த 'காரணத்தால், (என் செயலற்று) அவனது திருவருட்டுணை கொண்டு அவனது திருவடிகளைத் தொழுது (இயற்றிய நற்றவத்தின்பயனாக), நெற்றிக்கண் முதல்வன் ஆசிரியனாக எழுந்தருளி வந்து தனது அருட்பார்வை நல்கவே (சிவஞானம்) பெற்று, மனத்தாற் கிட்டவொண்ணாத (மாறிலா) அழகு நிறைந்த அவனது திருவடிகளைப் பணிந்து, எனது நெஞ்சம் மகிழ்ச்சியடையவும், முற்பிறவியிற் செய்த எனது ஊழ்வினை முற்றிலும் ஒழிந்து போகவும், சிவனது பழமையான அருட்செயல் முறையினை யான் சொல்லுவேன்.

**குறிப்பு** (கஎ - உஉ) :—" சிவனவன் " என்பதில் " அவன் " என்பது பல்சமயத்தாரும் பொதுவாகக் குறிக்கும் முழுமுதற்கடவுள் என்று பொருள் படுவதாகும். திருவருள் பெற்ற காலையும், எடுத்த உடம்புகொண்டு நுகர்தற்குரிய முன்வினைப்பயன் எஞ்சி நிற்ற

விண்ணிறைந்து(ம்)மண்ணிறைந்து(ம்)மிக்காய் விளங்கொளி [யாய்
எண்இறந்து எல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
௨௫ பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்

லின், "முந்தைவினை முழுதும் ஓய" என்றார். சிவஞானம் பெற்ற பெரியோருக்கு அறிவு புறத்தே சென்ற காலை, இறை புகழ்பாடு தல் எண்ணத்திற்கின்பம் பயத்தலின், "சிந்தை மகிழ" என்றார். இறைவனது ஞானத்தைப் பெறுதற்கு முன்னேயே, சரியை, கிரியை யோகமென்னும் நற்றவ வழியில் நிற்றற்கு அவன் திரு வருள் வேண்டப்படுமாதலின் "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றார். ஞானம் பெற்றபின் அறியப்படும் சுட்டிறந்த வணக்கம் "எண்ணுதற்கெட்டா" என்பதாலுணர்த்தப்பட்டது.

**உரை** (௨௪ - ௨௫) —(மேலுள்ள) வானுல (கெங்கும்) நிறைந் தும், (கீழுள்ள) மண்ணுல (கெங்கும்) நிறைந்தும், அவற்றிற் கப்பாலுமாய் விளங்குவானே. (எங்கும்) திகழுகின்ற ஒளிமேனி யனே, கணிக்கப்படுஞ் சுட்டுப்பொருளனைத்தையுங் கடந்து நிற்கும் அளவிலாத்தன்மையனே, நினது (ஒப்புயர்வற்ற) பெரிய புகழினை (அறிவு விளக்கத்தைத் தடைசெய்யுந்) தீயவினையுடையேன் எடுத் தோதும் வகை யாதுந் தெரியாதேன்.

**குறிப்பு** (௨௪ - ௨௫) —"நிறைந்து" என்பது இறைவனது பூரணமான அறிவுஞ் செயலும் விளங்குவதைக் குறிக்கும். அது காற்று, வான் முதலிய சடப்பொருளின் வியாபகம் போன்ற விரிவினைக் குறியாது. இறைவனது வியாபகத்தின் ஒரு பகுதியுள் உலகெலாம் அடங்குதலின் "மிக்காய்" என்றார். "தேசமா ஒளிக ளெல்லாம் சிவனுருத்தேசது" என்ற கருத்துப்பற்றி, "விளங் கொளியாய்" என்றார். தத்துவம், புவன முதலியன எல்லாம் நூல்களாற் கணிக்கப்படுவன. அவற்றைக்கடந்த இறை நிலை "எண்ணிருந்து" என்பதாற் குறிக்கப்பட்டது, "வினையினீங்கி

வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
௩௰ செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்.
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டுஇன் றுவீடுற்றேன்
உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
௩௫ ஐயா வெனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே

விளங்கிய அறிவின்" எனறமையால வினை, அறிவு விளக்கத்
திறகுத தடையென உரையுட் கூறப்பட்டது உயிர இயறகை
யாகவே சிறு தொழில் உடையது தன் சிறு செயல்கொண்டு
இறைவன் பெருஞ செயலை யளககவல்லது அன்மென்பார்,
"பொலலா வினையேன்" என்றார

**உரை நடை** (உகூ- ௩) —எம்பெருமான் (பல்) கல்லாய்ப்
புல்லாகிப் பூடாய மரமாகிச செல்லாஅ நின்ற இத்தாவரத்துள
புழுவாயப் பாம்பாய்ப் பறவையாயப் பல்விருகமாகி மனிதராயப்
பேயாயக கணங்களாய் வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச
செல்லாஅ நின்ற இச சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்
தேன

**உரை** (உகூ-௩க) —(உலகத் தோற்றத்தில்) கற்பாறை யுருக்
களின் அடங்கிக் கிடந்து, (பின) புல்லாகியும் அடாநத புற்செடிக
ளாகியும, மரஙகளாகியும் (படைககப்பட்டு) நிகழுகின்ற (பலகோடி)
நிலையியற பொருள்களுள்ளும, புழு, பாம்பு முதலிய ஊாவனவாகி
யும, பறப்பனவாகியும, விலஙகுகளாகியும், மககளாயும், பேயினங்க
ளாயும், பூதகணஙகளாயும், வலிய அசுரராயும், முனிவராயும்,
விணணவராயும், (படைககப்பட்டு) இயஙகுகின்ற பலகோடி
பிராணிகளுள்ளும், (அடஙகிய) எல்லா வகையான பிறப்பினும
உடலெடுத்திறந்துழன்று அலுத்தேன்

**குறிப்பு** (உகூ-௩க) —உயிர்த தோற்ற நூலார் முறைப்படி
பிறவிகளைத் தொகுத்துப் பொருள் கூறப்பட்டது. விருகம் - மிரு
கம் - விலஙகு "பல்" என்ற அடையை எஙகுங் கூட்டலாம

வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
சO அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

**உரை நடை** (ங உ-ம ரு) —முதலடியை இறுதியடியாகக் கொள்க

**உரை** (ங உ-டரு)—ஆணவ விருளிற் கிடந்த யான், உடம் பெடுத்துழன்று, பகலும் வந்தாலே உன் திருவடியைக் கூடிப் பிறக்கும் வண்ணம், எனது நெஞ்சத்துள், (ஐந்தொழிற்கும் காரணமான) ஓம் என்ற முதுமொழிவடிவாய் நின்ற உண்மை யனே; கட்டிலாதவனே (அருவுருவாகிய) காளைமேலேறுந்தருள் பவனே, அறிவு நூல்கள் (என்னுடைய பேரறிவினைக் காணமாட் டாது) ஐயனே என்றலற. (அவற்றின் எல்லை கடந்து உயர்ந் தும் தாழ்ந்தும் விரிந்தும் (விளங்குகின்ற பெருமையையுடைய அவற் றைக் காணவொண்ணாத) நுட்பப் பொருளாய் எவற்றிலும் கலந் துள்ளவனே, (பிறவியில உழலாது) நிலைப்பா யிருத்தற் கேதுவாய உனது அழகிய திருப்பாதங்களை இப்போது காணப்பெற்றுப் பாச நீக்கம் அடைந்தேன.

**குறிப்பு** (ங உ-டரு) —உயிர்கள் உய்யுமாறு இறைவன் ஐந் தொழிலியற்று மிடத்து, உயிர்க்குயிராய் நின்று ஓங்காரத்தின் பிரிவாகிய அகரம், உகரம், மகரம், விந்து, நாதமெனபவற்றினை வாயிலாகக் கருவிகளை யியக்குவதாலும், ஓங்காரம், இறைவனது சிறந்த மந்திரவடிவமாதலாலும "உய்ய என் உள்ளத்துள் ஓங்கார மாய் நின்ற" என்றார் இறைவன் ஐந்தொழிலியற்றினும், தனது மெய்யியல்பில் மாற்றமிலாமையின், "மெய்யா" என்றார் அங்ஙன மிருத்தற்குக் காரணம் இயல்பாகவே கட்டிலாமை யாகலின், 'விமலா' என்றார் வி-இன்மை. மலம் - கட்டு. இறைவன் நடு நிலையன் என்பார், "விடைப்பாகா" என்றார் அவன் பெரியதிற் பெரியதாய்ச் சிறியதிற் சிறியதாய், எங்கும் கலந்து நிற்கு முறை, நூலுணர்வானறியப் படாமையின், "வேதங்கள் ஐயா என" என்

ஆக்கம் அளவுஇறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்

றார் "மெய்யேயுன்" என்பதில், மெய் - நிலைப்பு, எய - பொருந்து; பொன், மாற்றமிலா ஒளி நயமுடையது வீடு - (பாசத்தினின்று) விடுபடுதல்

**உரை** (௩௮-௪௦) :—வெப்ப முடையவனே, குளிர்ச்சியுடைய வனே, (அத்துவிதக்கலப்பால்) உயிராய் விளங்கு மாசிலாதவனே- (யான் பற்றிய) நன்மையிலாதனவும் நிலையாதனவுமாகியவைக ளெல்லாம் என்னைவிட்டு நீங்கி யொழியுமாறு குருவாய் வந்து அருள் புரிந்து மெய்யறிவாய் விளங்குகின்ற உண்மை யொளியே, எவ்வகையான அறிவும் விளங்கப்பெறாதேனுக்குப் (பேறறிவின் பயனாய்) பேரின்பம் ஈந்தருளும் பெருந்தன்மையனே, (பொய்யை மெய்யென வுணரும்) திரிபுணர்ச்சியை நீக்கச் செய்யும் தூய அறிவானவனே

**குறிப்பு** (௩௮-௪௦) :—"வெய்யாய்" என்றது ஞாயிறுபோல ஆண் தன்மை யுடையனாதல் குறித்தற்கு, "தண்ணியாய்" என்றது திங்கள்போலப் பெண் தன்மையுடையனாதல் குறித்தற்கு. இயமானன் - உயிர் இது வடமொழியில், வேள்வி யியற்றுவானுக்குச் சிறப்புப் பெயராய் உயிர்க்குப் பொதுப் பெயராய வழங்குவது. உயிர்க்குயிராய்க் கலந்து, உயிர்களை ஆணாகவும் பெண்ணாகவும் பிறப்பித்தற்குரிய சிவமுஞ் சத்தியுமாய இறைநிலை குறிக்கப்பட்டது. அங்ஙனம் உயிரொடு கலந்து நின்றும், தனது தூய இயல்பு மாறாதவ னென்பார், "விமலா" என்றார். பொய் - தீயவற்றையும், நிலையாதவற்றையும் குறிக்கும். பாச நீக்கத்தில் விளங்கும் மெய்யறிவு பதி ஞானமெனப்படும். இறைவன் கதிரவன்போலவும், மெய்ஞ்ஞானம் கதிர்போலவு மிருத்தலின், "மெய்ஞ்ஞானமாகி" என்றார். எவ்வகையறிவு மில்லா நிலை, ஆணவத்தோடு கிடந்த உயிரின் தனிநிலை. அஞ்ஞானமென்பது, நல்லறிவுக்கு மாறாய புல்லறிவு. நல்லறிவு என்பதில் "நல்" என்பது "பெரும் பயன்

நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
௫௦ மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் றன்னை

தரும்' என்ற பொருளுடைத்தென்றலும ஒன்று "நற்றாள்" என்பதிற்போல.

**உரை நடை** (சக-ச.) —அழிப்பாய, என்னைப் போக்குவாய, நின்தொழும்பிற் புகுவிப்பாய் அருள் தருவாய.

**உரை** (சக சு) —படைக்கப்படுதல், ஒருகால அளவாக நிலை பெறுத்தப்படுதல், ஒடுக்கப்படுதல் என்பன இல்லாதவனே, எல்லா உலகங்களையும் நீயே படைப்பாய், நிறுத்துவாய், ஒடுக்குவாய மல பரிபாகம வரும்வரை என்னைப் பிறவியிற் செலுத்துவாய (உடந் கூடுங்காலம வருங்கால் நின திருத்தொண்டாகிய நற்றவத்திற் புகுவிப்பாய (பின்னர், பிறவி யறுதற்கேதுவாய) நின திருவருளைத் தருவாய்

**குறிப்பு** (சக-சக) —தொழும்பு - தொண்டு இறைவனது ஐந்தொழிலும், அவற்றை யாற்றவல்ல அவனது தனிச்சிறப்பும இங்கே கூறப்பட்டன

**உரை** (சசு-சஅ) —(பூவின்) மணம்போல நுட்பமாயிருப்பவனே, நீ, தூரத்திலிருப்பவனுமாவாய், அருகே யிருப்பவனுமாவாய, (எவ்வாறெனில்) சொல்லையு மனத்தையுங் கடந்து நிற்கின்ற இரகசியப் பொருளாயுள்ளாய் எனினும், நின் மெய்யடியார்கள் உள்ளத்திலே சிறப்பாக விளங்கி(ப் பசுவிலே உடன்) கறந்த புனிதமான பாலோடு சர்க்கரையும் நெய்யுங் கலந்து இனிமைப்பயந்தாற் போல, இன்பம் ஊற்றெடுக்குமாறு நிலைபெற்றருளி எடுத்த பிறவியை யொழிக்கும எங்கள் பிரானுயுள்ளாய்

**குறிப்பு** (சசு-சஅ) —கண்ணிற்குத்தோன்றும் பூவிலே அதன்

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
௫௫ மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகு
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
௬௦ நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே

மணமானது தோன்றாது கலந்திருத்தல்போல, உலகுயிர்களிலே இறைவன் தோன்றாது கலந்திருத்தல் குறித்தவாறாம். நேர - நுட்பம், ஒப்பு என்றும் பொருள்படும் "மணம் போன்றிருப்பவனே' என்றும் பொருள் கொள்க. தேன் - இன்பத்திற்கு அறிகுறியென்க. ஊறி - ஊற. அறிவிற்குப் பாலையும், செயலுக்குக் கன்னலையும், விழைவிற்கு நெய்யையும் உவமை கூறுவதுண்டு.

**உரை** (௪௯-௫௦)—எமது பிரானே, (பூதங்களைத் திருமேனியாகக்கொண்ட நீ அவற்றிற்குரிய ஐந்து நிறங்களையு முடையாய்,) (அன்பர்க்குப் பூத நிறங்களோடு தோன்றும் நீ) செருக்குடைய வானோர் உன்னைத் துதித்தபோதும், நீ அவர்கட்குத் தோன்றாது ஒளித்திருந்தனை.

**குறிப்பு** (௪௯-௫௦)—பொன்னிறம், வெண்ணிறம், செந்நிறம், கருநிறம், புகைநிறம் என்பன நிலம், நீர், தீ, கால், வான் என்பவற்றிற்கு முறையே நிறமாகக் கொள்க. இறைவன் ஓர் இயக்கன்போலத் தோன்றி நின்ற காலை, விண்ணவர் அவனை அறிந்திலா என்ற கதை கேந உபநிடதத்துட் காண்க.

**உரை நடை** (௫௦-௬௧)—விமலா, வல்வினையேன்றன்னை மறைந்திட மூடிய இருளைமாய, அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டி, புழுவழுக்குப் புறந்தோல் போர்த்து மூடி மலஞ்

௭௦ இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
௭௫ கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே

பொருளில் வந்ததாகக் கொள்க. தான் மலத்தின் வேறாதல் குறிப்பான், "வல்வினையேன் தன்னை" யென்றார். 'குடிலை' என்பதில் ஐ இரண்டாம் வேற்றுமை யுருபு. மலங்க - கலங்க. விலக்குந் தடை. கசிந்து - அழுது. நீள் - நீண்ட - புகழாற் சிறந்த. நாய, உடையானைச் சார்ந்தொழுகும் உடையானைத் தான் சார்ந்தொழுகாமை கருதுதலின், 'நாயிற்கடையாய' என்றார். தாய—கைம்மாறு கருதாது உதவியல்பினள் அவள் என்றும் யாண்டும் உதவ இயலாமையின், என்றும் யாண்டு முதவு மெய்யன் தாயிற் சிறந்தானாதல் காண்க.

**உரை** [illegible] —குற்றமில்லாத ஒளியானது இதழ்களாக மலரப்பெற்ற பூப்போன்ற ஒளிமேனியனே, குரு முதல்வனே, இனிமை நிறைந்த பிறவி மருந்தே, சிவலோகனே, கட்டுப்படுத்தற் கேதுவாகிய அவாவினை வேரறுத்து அறிவினை விரியச் செய்யு மேலோனே. காதலொடு கூடிய இரக்கம் வைத்து என்மனத்துள்ள களங்கம் ஒழியும்படி (எனது உள்ளத்தை விட்டு நீங்காது) விளங்கிய பேரருள் வடிவாகிய (வற்றாதோடும்) பெரிய ஆறு போன்றவனே, (உண்ண உண்ணத்) தெவிட்டாத இன்னமுதம் போன்றவனே, அளவிடற்காகாத பெருமையுடையவனே, அயர்ந் தறியாதா ருள்ளத்திலிருந்தும் அவர்கட்குப் புலனாகாத சோதியே (எனது கல்மனத்தைக் கரைத்துத்) தண்ணீராக உருகும்படி செய்து பிரிவற்றதொரு உயிர்க்குயிராய் நின்றவனே.

ஆற்றின்ப வெள்ளமே அத்தா மிக்காய்நின்ற
௭௦ தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே.

**குறிப்பு** (௬௨-௬௬) :—இறைவனது திருமேனி ஒளிமயமும மென்மையு முடைமையால், ஒளியாலாகிய பூவிதழ் போன்ற சிறப்புடைய திருவடிவமென்று குறித்தார். தேசன் - ஆசிரியன்- தேன் - இனிமை அமுது - சாவாமருந்து பாரிக்கும் - விரிக்கும், வளர்க்கும். ஆரியன் - மேலோன். நேசம், தாயன்பு போன்ற விருப்பம்

**உரை** (௭௦ ௭௮) —(உலகுயிர்களினால் வரும் இன்பமுந் துன்பமு மில்லாதவனே, (அன்பர் பொருட்டு) அவற்றையுடைய வனே, கலப்பினால் எப்பொருளுமாய, பொருட்டன்மையால ஒன்று மல்லாதவனுமா யிருக்கின்ற அறிவுருவனே, அடர்ந்த இருள் போன்றவனே : தோன்றாத பெருமையை யுடையவனே, (எப் பொருளின் தோற்றத்திற்கும்) மூலகாரணனே. (எவற்றையு மொடுக்கும்) இறுதிக் கடவுளாயும், எப்பொருளினு முள்ளீடாயு மிருந்து, தனக்கொரு முதலு முடிவு நடுவுமில்லாதவனே. என்னை வலிய இழுத்து ஆட்கொண்டருளிய எமது அப்பனாகிய பெருந் தன்மையனே. கூரிய மெய்யறிவினாலே கேட்டுச் சிந்தையுட் கொண்டு தெளிந் துணர்வாருடைய உள்ளத்தே சுட்டியறிந்தறியப் படும் பொருளே, சுட்டப்படாத அனுபவப் பொருளே, நோக்கப் படும் நுட்பப் பொருளே ஒன்றை நாடிப் போதலும் அதனையடை தலும், அதன்கணின்று மீளுதலுமில்லாத நன்மையனே, உயிர் களை உய்தி கூட்டுவிக்கும் எமது அரசனே, நீ அங்ஙனஞ் செய்வதை (உயிர்கள் தமதறிவாற்) காணுதற்கரிய பெரிய அறிவே.

**குறிப்பு** (௭௦-௭௮) :—இறைவன் தானே இன்பமுடையவன். பிற பொருளால் வரும் இன்பத்தை நாடுபவனல்லன். அவன் துன்பமில்லாதவனென்பது தெளிவு. தன்செயலற்ற அன்பர்களு

வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
௮௫ ஆற்றேன்எம் ஐயா அரனேஓ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
௯௰ தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்

வருமின்ப துன்பங்களைத் தன்னுடையனவாக ஏற்றுக்கொள்ளும் இயல்பு இறைவற்குக் கூறப்படுதலில் "அவையுள்ளானே" என்றார். இதற்குக் காரணத்தை "அன்பருக்கன்பனே" எனத் தாம் குறித்தார். சோதி - அறிவு. உலகப்பற்றுவிட்டு இறைவனைப் பற்றக்கருதும் பரிபாக முடையார்க்கு அவன் கதிரவனுதயத்திற்கு முன் உள்ள தாங்கா காரிருள்போல்வானாதலின், "துன்னிருளே" என்றாரென்பதுமுண்டு. ஐம்புலனால் ஒரு சிறிதும் அறியப்படாமை பற்றித் "துன்னிருளே" என்றாரென்ப. "உன்றனை யெதிரே கண்டும் அம்புயத் தோனுணர்ந்திலன், மால் சொலவுணர்ந்தான்" என்றபடி இறைவன் வெளிப்படையாகத் தோன்றினாலும், தனனை உயிர்கட்கு அறிவித்தாலன்றி, உயிர்கள் அவனை யறியமாட்டாத இயல்பினவாதலின், 'தோன்றாப் பெருமையன்' என்றார். இறைவன் பல அருளுருவமெடுத்துத் தோன்றி மறைதலின். ஆதியும் நடுவும் அந்தமும் முடையானென்பாருமுளர். நடு, என்ற சொல், அந்தரியாமித்துவங் குறிக்குமென்பர். இறைவன் எவற்றினுள்ளும் இருத்தலின் அவை காக்கப்படுகின்றன வென்ப. குதிரை வாங்கப்போன அடிகளை வலியத் தன்பால் வருவித்து ஆட்கொண்டமையின் "ஈர்த்து" என்றார். வினையிலே கிடந்தேனைப் பக்குவகாலம் வருமுன்னரே ஆட்கொண்டானென அடிகள் பிறவிடங்களிற் கூறுதல் காண்க. தீவிர உணர்ச்சியைக் கூர்ந்த மெய்ஞ்ஞானம் என்றார்போலும். நோக்கு, அறிவையும், உணர்வு, அனுபவத்தையும்

சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
௯௫ பல்லோரு மேத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

குறிக்குமென்ப "நோக்கு" என்பது இறைவனது அகண்ட வியல்பையும், "நுண்ணுணர்வு" என்பது அவனது அதி நுட்ப வியல்பையுங் குறிக்கு மென்பாருமுளர். "போக்கும் புணர்வும் வரவுமிலா" என உரைநடை கொள்க.

**உரை நடை** (௭௬-௮௫) — "மாற்றமாம் வையகத்தின்" என்பதை "மிக்காய" என்பதன் முன்வைக்க.

**உரை** (௭௬-௮௫) —ஆற்றின் தூய புனல்போலத் துன்பங் கலவாத இன்பப்பெருக்கே, அப்பனே, மாறுபாடடைகின்ற உலகத்திற்கு அப்பாற்பட்டவனாய் நிலைபெற்ற விளக்கமுடைய கதிரொளிப் பிழம்பாய், மொழியாலுணர்த்துதற்கரிய நுட்ப அனுபவமாய், உலகத்தே வெவ்வேறாகக் காணப்பட்டு வந்து முடிவாக அறியாமைத் தெளியப்படுந் தெள்ளியனே (கேட்டுச் சிந்தித்துத்) தெளிந்த விடத்தே விளங்குந் தெளிவான பரம்பொருளே, எனது உள்ளத்திலே ஊற்றெடுத்துத் ததும்பிய உண்ணாத் தெவிட்டாத அமுதமே, (கட்டிலும் வீட்டிலும்) என்னை அடிமையாக உடையவனே

**உரை** (௮௬-௯௫) —எமது தலைவனே வெவ்வேறு திரிபுகளுடைய ஊனுடம்பினுள்ளே கிடத்தலையான் பொறுக்கமாட்டேன். (அவ்வுடம்பைத் தொலைக்கவல்ல) அரனே, ஓலம் என்று கூவிக் கூவி. வழிபட்டுப் பாடி நினைத்திருந்து நிலையாதவற்றின் பற்றற்று நிலைப்பொருளோ டொன்றுபட்டவர்கள் மீண்டும் இவ்வுலகில் வந்து வினைக்கீடாய பிறப்பினையடையாமே வஞ்சராகிய ஐம்புல வேடர். சிறுமையாய உடம்பை முற்றிலும் தொலைக்குந் திறமையனே. நடுஇரவு போன்ற முழுது முடிவுற்ற காலத்தே தனது திருக்கூத்தினைப் பழகி(ப்பின் தோற்ற காலத்தே) பெருநடம் புரியு முதல்வனே, (நிலவுலகில்) தில்லை மன்றினுளாடுவானே, தெற்கின் கணுள்ள பாண்டி நாட்டை யுடையவனே, துயருடைய

இப்பிறப்பினை யொழிப்பானே ஓலம் என்று, சொல்லாற் கூற வொண்ணாதானை வழுத்தி

**குறிப்பு** (அச - கூஉ)—வேற்று விகாரம, அறிவு நிலைமாறு மாறு யுள்ள திரிபு என்று பொருள் கொள்ளுவாருமுளா. விடக்கு - ஊன் கட்டழித்தல் - முற்றிலு மழித்தல தென் - இயற்கை யடை அரன - பாசத்தை யழிப்பவன். பயிலுதல் போறலின் (பயின்று) என்றா.

**உரை** (கூஉ - கரு) .—அவனது திருவருள் வயமாய் நின்று மொழிந்த இககலி வெண்பாட்டின் பயன்தெரிந்து ஓதுபவாகள் சிவலோகத்தினுள்ளே புகுவாாகள் ஆணடுச சிவ முதல்வா திரு வடிககீழ அனபா பலரும் வணஙகிப் புகழுமாறு இருப்பாாவா

**குறிப்பு** (கூஉ - கரு) —அடி - அருள். பயன உணாந்தியம்பு வாா பயனைப் பெறுதற் குரியராவா. திருவடி என்பது இறைவன் அறிவு செயல்களைக் குறிககும் உயிரினறிவு செயல்கள் இறைவ னுடையவற்றின் அடஙகி நிற்றலே திருவடிக கீழிருத்தலாமெனப. சிவபுர மெனபது வீட்டினை புருவமாகக் குறிப்பதாய, சிவனொடு கலத்தலைக் குறிககு மெனப



தில்லையில் அருளிய

# கீர்த்தித் திருவகவல்



## சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமை

### நிலைமண்டில ஆசிரியப்பா

திருச்சிற்றம்பலம்

தில்லை மூதூ ராடிய திருவடி
பலவுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகுந்
௫ துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்
என்னுடை யிருளை ஏறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்பு மீதூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்

கீர்த்தித் திருவகவல் - இறைவன் அன்பர்க்கருள் புரிந்த செய்திகளைக் கூறும் வாயிலாக அவன் புகழினை வியம்பும் அகவற்பா. இது தில்லையிலருளிச் செய்யப்பட்டமை, 'தில்லை' யென்று தொடங்கியதால் விளங்கும்.

**உரை** (க - அ) :—தில்லையென்னும் பண்டைத் திருப்பதியின் கண்ணே கூத்தியற்றிய பொற்பாதங்கள் பலவகைப்பட்ட உயிர்கள் எல்லாவற்றினுள்ளும் பொருந்தச் செய்தவனாகி, கணக்கில் அடங்காத தனது பல்கோடி அருட் பண்புகளும் சிறந்து தோன்றுமாறு வெளிப்பட்டு, மண்ணுலகிலும் விண்ணுலகிலும் (அதற்கு மேற்பட்ட) வானவர்கள் உலகிலும் பொருந்திய கலைகளைத் தோற்றுவித்தும் ஒடுக்கியும், என்னை மேற்கொண்ட அறியாமையை முற்றிலும் ஒழித்தும், அடியவர்கள் நெஞ்சத்திலே மெய்யன்பு பொங்கி

செல்லக் கருதலுமியலாது, என்றைக்குமெனது நிறைந்த அன்பிற் குரிய மேலான அமுதமானவனைப் போயடைதலென்பதும் நிகழாது.

குறிப்பு:—ஒன்றினை டொன்றும் என்பதற்கு உடம்பினொடு பிராணனுமென்று கூறுவாருமுளர். உயிர்ப்பது - கலந்தியங்குவது. தாயென வந்த என்பதைக் கடவுளாக ஏற்றித் தாய்போலக் குருவாகி வந்ததெனப் பொருள் கொள்வதுமுண்டு. பராவமுதை யடைந்து விட்டபடியால் எய்தலாகாது என்றார். (௨)

பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த பராஅமு தாகாதே
அந்த மிலாத அகண்டமு நமதுள் அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர் அண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை சிந்திடு மாகாதே
சேலன கண்கள் அவன் திருமேனி திளைப்பன ஆகாதே
இந்திர ஞால இடர்ப்பிற வித்துய ரேகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய ஈசன் எதிர்ப்படு மாயிடிலே.

உரை:—என்னுடைய தலைவனாகிய ஆண்டவன் எதிரே தோன்றிக் கலந்தருளுமாயின், பாசத் தொடர்பான வேற்றுமைப்பட்ட பல வியல்புகள் மறைதலும், மீட்டுத் தோன்றுதலும் நிகழா. கடவுளைப் பாவிப்பதால் உள்ளத்திற்றோன்றிய கற்பனைத் திருவடிவக் காட்சியாயுள்ளதாம், மேலான அமுதமும் அனுபவித்தலாகாது. எல்லையற்ற கட்டுப்படாத வடிவக்காட்சி நமதுள்ளத்தே புலனாதலும் நிகழாது. படைப்பு முதல் உதவிய மேலான சோதிப் பொருளைப் போயடைதல் நிகழாது. செவ்விய பவளவாயையுடைய பெண்டிரால் வரும் இடையூறுகள் ஒழிதல் என்பது நிகழாது. சேல் மீன்போன்ற இறைவனது திருவுருவத்தைக் காணுதலும் நிகழாது. இந்திர கண்கள் சாலம்போல மாயமான இடைஞ்சலான பிறவித்துன்பம் ஒழிதலென்பதும் நிகழாது.

குறிப்பு:—இச்செய்யுளுட் கூறியன வெல்லாம் கடவுளோடு இரண்டறக் கலப்பதற்கு முன் நிகழ்வன வென்றும் பின் நிகழா

வென்று மறிக. ஆதிமுதற் பரமாய பரஞ்சுடரென்றது ஐந் தொழில் செய்யுந் தடத்த இலக்கணமுடைய கடவுளைக் குறிக்கும். இந்திர ஜாலவித்தையை அறுபத்து நான்கு கலைஞானங்களி லொன்றென்ப. (௫)

என்னணி யார்முலை ஆகம் அளைந்துடன் இன்புறு மாகாதே
எல்லையில் மாக்கரு ணைக்கடல் இன்றினி தாடுது மாகாதே
நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற நண்ணுவ தாகாதே
நாதன் அணித்திரு நீற்றினை நித்தலும் நண்ணுவ தாகாதே
மன்னிய அன்பரில் என்பணி முந்துற வைகுவ தாகாதே
மாமறை யும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
இன்னியற் செங்கழு நீர்மலர் என்தலை எய்துவ தாகாதே
என்னையுடைப் பெருமான் அருள்ஈசன் எழுந்தருளப் பெறிலே.

உரை — என்னை அடிமையாகவுடைய பெருமானாகிய கருணை முதல்வன் தோன்றி வீடருளப்பெற்றால், எனது நகைகள் நிலவிய நகில்கள் அவனது திருமேனியிற் படிந்து இன்புறுதல நிகழாது. எல்லையில்லாத பெருங்கருணைக் கடலில் இப்பொழுது நன்கு திளைத்தல் நிகழாது நலல மணியோசை முதலியன என்னுள்ளே மிகுதியாகப் பொருந்தி முழங்குதல் நிகழாது. இறைவனணிகின்ற திரு நீற்றினைப் பூசுதலும் ஏற்படாது. நிலைபெற்ற அன்பருள் எனது பணிவிடை முற்பட்டு இருத்தல் நிகழாது பெருமை பொருந்திய மறை நூல்களறியாத திருவடிக கமலங்களை வழிபடு தலும் நிகழாது. இனிய இயல்புடைய செங்கழு நீர்ப்பூப் போன்ற திருவடிகள் எனது தலையிற் பொருந்துதலும் நிகழாது

குறிப்பு—இறைவர் திருமேனியைத் தழுவுதல் அவனது திரு வடிவத்தில் ஒடுங்குதலாகும். அது தத்துவச் சார்புடைய தாதலின், தத்துவங் கடந்த அத்துவிதககலப்பில் அது நிகழாது என்றார். திரு அருட்பேறு சிவப்பேற்றிற்கு முற்பட்டதாகலின் சிவப்பேற் றின் பின் அது நிகழாது என்றார். மணிநாத முழங்குதல் யோகியர் உடம்பில் நிகழுவது. அது ஞானநிலையில் நிகழாதென்றனர். (௬)

மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறு மாகாதே
வானவ ருமஅறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
கண்ணிலி காலம் அனைத்தினும் வந்த கலக்கறு மாகாதே
காதல்செ யும்அடி யார்மனம் இன்று களித்திடு மாகாதே
பெண்ணலி ஆணென நாமென வந்த பிணக்கறு மாகாதே
பேரறி யாதஅனேக பவங்கள் பிழைத்தன ஆகாதே
எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை எய்துவ தாகாதே [லே.
என்னையுடைய பெருமான் அருள்ஈசன் எழுந்தருளப் பெறி

உரை:—என்னையுடைய பெருமானாகிய கருணை யாண்டவன், எழுந்தருளப் பெற்றால், மண்ணுலகத்தினில் மாயா காரியங்களைக் கருதி அவற்றின் வகையாக எழுந்த மயக்க உணர்ச்சி ஒழிதல் என்பது நிகழாது. தேவர்களு மறியாத திருவடிக் கமலங்களை வழிப்படுதலும் நிகழாது ஞானமில்லாதவனாய் இருந்த காலமெல்லாம் ஏற்பட்ட கலக்கங்கள் என்பது நிகழா. பெண் ஆண் அலி யெனவும், நாமெனவும் நீரெனவும் பேசவந்த மாறுபாடுகள் ஒழிதல் என்பதும் நிகழாது. போகட்ட சொல்ல முடியாத பல பிறவிகளுள் நின்று தப்பிப் பிழைத்தல் என்பதும் நிகழாது எண்ணிலடங்காத அற்புதத்திறன்கள் என்னை வந்தடைதல் நிகழாது

குறிப்பு:—மாயையினாலாகிய மயக்கத்தை முதற்கண் குறிப்பித்தார். அது ஆணவத்தால் வந்த மயக்கினை வேறாக்கும். கண் - ஞானத்திறக் குறிப்பு. கண்ணிலி காலம் - கண்ணிலியா யிருந்த காலம். கலக்கு - கலக்க மென்பதன் கடைக்குறை. பவங்கள் - பிறவிகள்.

(௬)

பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறுபொலிந்திடு மாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடு மாகாதே
மின்னியல் நுண்ணிடை யார்கள் கருத்து வெளிப்படு மாகாதே
வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம் மிகுத்திடு மாகாதே

தன்னடி யாரடி என்தலை மீது தழைப்பன ஆகாதே
தானடி யோமுட னேஉ(ய்)ய வந்து தலைப்படு மாகாதே
இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக இயம்பிடு மாகாதே
என்னைமுன் ஆளுடை ஈசன் என்அத்தன் எழுந்தருளப் பெறிலே.

உரை:—என்னை முன்னாளிலே யாட்கொண்டருளிய முதல்வன் என் அப்பன் எழுந்தருளப் பெற்றால், பொன்னின் தன்மையோடு விளங்குந் திருமேனிமீது வெள்ளிய திருநீறு விளங்குதலும் நிகழாது. பெருந் தவத்தினரது கரங்கள் கூப்பி மலர் மழையை இறைவன் திருவடிக்கண் சொரிந்திடுதலும் நிகழாது. மின்னலைப் போல அசையும் நுண்ணிய இடையையுடைய பெண்டிரது உள்ளக்கருத்து வெளிப்படுதலும் நிகழாது. வீணை முதலாகி உண்டாகின்ற இன்னிசையில் இன்பம் மிகுதிப் படுதலும் நிகழாது. இறைவனது அடியார்கள் திருவடிகள் எனது தலைமீது விளங்குதலும் நிகழாது. இறைவன் அடியார்களாகிய நாங்கள் உய்யும்படி எழுந்தருளி வந்து தோன்றுதலும் நிகழாது. இனிய வாத்தியங்கள் எவ்விடத்தும் நிறைந்து இனிதாக ஒலித்தலும் நிகழாது.

குறிப்பு:—மழை என்பதை பொலிந்திடு மென்பதனோடு முடிக்க. அடியோம என்பதை உடனே என்பதோடு முடித்தலு முண்டு. இயம் - வாத்தியம். (௬)

சொல்லிய லாதெழு தூமணி யோசை சுவைதரு மாகாதே
துண்ணென என்னுள மன்னிய சோதி தொடர்ந்தெழு
பல்லியல் பாய பரப்பற வந்த பராபர மாகாதே [மாகாதே
பண்டறி யாதப ரானுப வங்கள் பரந்தெழு மாகாதே
வில்லியல் நன்னுத லார்மயல் இன்றுவி ளைந்திடு மாகாதே
விண்ணவ ருமறி யாதவி ழுப்பொரு ளிப்பொரு ளாகாதே
எல்லையி லாதன எண்குண மானவை எய்திடு மாகாதே
இந்து சிகாமணி எங்களை ஆள எழுந்தருளப் பெறிலே.

உரை:—சந்திரனைத் தலையின்கண் மணியாக வைத்த பெருமான், எங்களை யாட்கொள்ள எழுந்தருளப் பெற்றால் சொல்

உரை:—முடிவுணரப்படாத இரகசியப் பொருளாகிய பெருமான் என்னை யாட்கொள்ள எழுந்தருளப்பெற்றால், சங்குகள் பலவொன்று சேர்ந்து முழங்கினாற்போ லெழுவதாகிய ஓசை மிகுதிப் படுதல் நிகழாது (குலங் காரணமாக வருகின்ற குணங்கள் நம்மோடு இயங்குதல் நிகழாது.) அவ்விடத்தே இது நல்லது இது நல்லது என்ற மயக்கம் அடங்கி ஒழிதல் நிகழாது பற்று முழுவதும் இறைவனடியார்க் கடியோம் என்னு மவ்வளவே என்றலுங் கூறவொண்ணாது. சிவந்த கயல்மீன்போன்ற ஒளியையுடைய கண்ணை உடைய பெண்டிர் மணம் பூரித்தலும் நிகழாது. சிறந்த அடியார்களது சிவானுபவங்களை இன்னதென விசாரித்தலும் நிகழாது எவ்விடத்தும் நிறைந்து அமுதூறுதற்குக் காரணமாகிய பரஞ்சோதியை யடைதலும் நிகழாது.

குறிப்பு:—சங்கோச யோகானுபவம், (சாதிக்குணங்கள் பழக்க மிகுதியால் உண்டாவன.) மாயை என்றது புதுமைபற்றிய உணர்ச்சி. அமுதூறு பரஞ்சுட ரென்றது, உடம்பினிற் காணப் படும் உத்தமனை (௮)

திருச்சிற்றம்பலம்



தில்லையில் அருளிய

# ஆனந்தமாலை



## சிவானுபவ விருப்பம்

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மின்னே ரனைய பூங்கழல்க ளடைந்தார் கடந்தார் வியனுலகம், பொன்னே ரனைய மலர்கொண்டு போற்றுகின்றார் அமரரெல்லாம், கன்னே ரனைய மனக்கடையாய்க் கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த, என்னே ரனையேன் இனியுன்னைக் கூடும் வண்ணம் இயம்பாயே.

உரை :—மின்னலைப்போன்ற அழகிய இறைவன் திருவடிகளை யடைந்தவர்கள் பெரிய உலகநெறியைக் கடந்தவர்களாவார். தேவர்களெல்லாம் பொன்போன்ற அழகிய மலர்களைத் தூவி இறைவனை வணங்கா நின்றார். கல்லையொத்த மனத்தினையுடைய கீழ்ப்பட்டவனாய் அறிஞரால் கழிக்கப்பட்டுக், கவலைக்கடலில் வீழ்ந்த என்னையே போன்ற யான் இனிமேல் உன்னை வந்தடையும் விதத்தைக் கூறியருள்க.

குறிப்பு :—பூங்கழல்கள் - பொலிவுடைய திருவடிகள். இறுதியில் தனக்குத்தானே நிகரெனபார், என்னேரனைய என்றார். (க)

என்னால் அறியாப் பதந்தந்தாய் யானது அறியா தேகெட்டேன், உன்னால் ஒன்றுங் குறைவில்லை உடையாய் அடிமைக் காரென்பேன், பன்னாள் உன்னைப் பணிந்தேத்தும் பழைய அடியா ரொடுங்கூடா, தென்நா யகமே பிற்பட்டிங் கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே.

உரை :—என்னாலறிய வொண்ணாத பெருமையுடைய பதவியை நீ தந்தருளினை. யான் அதன் தன்மையறிந்து (பாதுகாவாது)

மெல்லாம் அநுபவித்து விட்டால் அதற்குப்பின் நீ காப்பதில் என்ன பயன்? கொடிய பெரு நரகத்திலே ஆழாத வண்ணம் தடுத்தாட்கொள்ளுங் குருவாகிய மாணிக்கமே, எங்கள் தலைவனே, நீ நியாய நிலையிலில்லாமற் போனால் அது நன்றாகுமா?

குறிப்பு:—பிராரத்துவ வினையை முற்றிலும் அநுபவிப்பதற்கு முன்னையே வீட்டினைத் தந்தருள வேண்டுமென்பது அடிகள் குறிப்பு. அன்பர் துன்பப்படுங்காலை அதனை நீக்குதல் இறைவர் கடன். அதனைச் செய்யாமை நடுவு நிலைக்கு மாறாகுமென்று குறிப்பித்தார். (ச)

தாயாய் முலையைத் தருவானே தாராது ஒழிந்தாற் றலையாய், நாயேன் கழிந்து போவேனோ நம்பி இனித்தான் நல்குதியே, தாயே யென்றுன் தாளடைந்தேன் தயாநீ யென்பா லில்லையே, நாயேன் அடிமை உடனாக ஆண்டாய் நான்தான் வேண்டாவோ

உரை:—தாயாகி வந்து நகிலினின்றும் பொழியும் பாலைத் தருபவனே (அதாவது தாய் முலையூட்டுதல்போல ஞானப்பாலளிப்பவனே) அந்தத் தாய்போல் தராது பாலினால் மெலியுங் குழந்தையைப்போல நாயேன் (அறியாமையினால்) கழிவாய்ப் போவேனோ, அண்ணலே இனியாயது அருள் தருவாயாக. உன்னைத் தாயே யென்றெண்ணி உன்னுடைய திருவடியை யடைந்தேன். 5 என்னிடத்தில் கருணையில்லா திருக்கின்றாய. நாயனுன்னை யடைந்தபுடன் என்னை யடிமையாக ஆட்கொண்டாய (இப்போது) அடிமையாகிய நான் உனக்குத் தேவையில்லையோ

குறிப்பு:—தாயாய் முலையாய என்பவற்றில் ஆய என்பது உவமை யுருவாகக் கொள்ளுதலுமுண்டு (ரு)

கோவே யருள வேண்டாவோ கொடியேன் கெடவே யமையுமே, ஆவாவென்று விடுமென்னை அஞ்சேல் என்பார் ஆரோதான், சாவா ரெல்லாம் என்னையோ தக்கவாறன் றென்றோரோ, தேவே தில்லை நடமாடு திகைத்தேன் இனித்தான் தேற்றாயே.

உரை :—அரசனே, நீ யருள்புரிய வேண்டியதில்லையா? கொடுமையேன் கெட்டுப்போதலே போதுமா? நீ ஐயோவென றிரங்காவிடில் அஞ்சாதே யென்றெனக் குரைப்பார் வேறு யார் தான்? பயன்பெறாது இறப்பவர்களெல்லாம் என்னோடு சரியோ, நான் பயன்பெறாது இறந்தால் அது தக்க முறையன்றென்று அன பர்கள் சொல்லாரோ? கடவுளே இல்லைத திருக்கூத்தியற்று பவனே. யான் திகிலடைந்தேன். இனியாவது நீயே அதனைத் தெளிவிப்பாயாக. (௬)

நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித் துப், பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்ச தேற்றும பெருந்துறையாய், அரிய பொருளே அவிநாசி அப்பா பாண்டி வெள்ளமே, தெரிய அரிய பரஞ்சோதி செய்வ தொன்றும அறியேனே.

உரை —நரிகளைக் குதிரை வாகனமாக்கி உலகம் எலலாம் தெரியும்படி செய்து பாண்டியனது பெரிய ஊராகிய மதுரையி லுள்ளவர்களுக்கெல்லாம் திகைப்பினை மிகுதிப்படுத்துந் திருப் பெருந்துறைப் பெருமானே, பெறுதற்கரிய மெய்ப்பொருளே, அவிநாசி என்னுந் திருப்பதியின்கண் வீற்றிருக்கு மப்பனே, பாண்டியனை கருணைவெள்ளமே, அறிதற்கரிய மேலான வொளி யானவனே, வீடடைதற்குச செய்யு முபாயமொன்றும் அறிகி லேனே.

குறிப்பு :—பரி - தாங்குவது என்ற பொருளில் இங்கே வந் தது, பிற இடங்களில் அது குதிரையெனப் பொருள் படும் நிகழ் வித்து - செலுத்தி எனவுங் கொள்ளலாம். பெரிய தென்னன் எனப் பிரித்து பெருமையுடைய பாணடியனெனவுங் கொள்ப. அவிநாசி என்பது கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ளது சுந்தர மூர்த்திகள் முதலைவாய்ப் பிள்ளை எழுப்பிய இடம் (௭).

திருச்சிற்றம்பலம்



தில்லையில் அருளிய

# அச்சோப் பதிகம்



## அனுபவ வழி அறியாமை

### கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே

உரை:—வீடடையும் வழியினை யறியாத முரண்பட்டவரோடு சேர்ந்து அவர் நெறி நிற்க முயல்கின்ற எனக்கு அன்பு நெறியை யறிவுறுத்தித், தொல்லை வினைகளும் ஒழியும் வண்ணம் மன மாசினை நீக்கிச் சிவமயமாக்கி எனையாட்கொண்டருளிய அப்பன் எனக்கு அருள் செய்த முறையை வேறு யார்பெற வல்லார்? இது அதிசயமே. (௧)

நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணங்
குறியொன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தையெனக்
கறியும்வண்ணம் அருளியவா றார்பெறுவார் அச்சோவே.

உரை:—நன்னெறி யல்லாத வழியை நன்னெறியாக நினைக்கு மியல்புடையேன் கீழ்ப்பட்ட நெறிகளை யடையாது திருவருளினையே கைகூடும்படி, (பெயர் வடிவு முதலிய) அடையாளங்கள் யாவும் இல்லாத திருநடப் பெருமான் தனது திருவருட் கூத்தினை அறியும்படி அடியேனுக்கு அருள் செய்தவாறு வேறு யார் பெற வல்லவர்? இஃதே அதிசயம். (௨)

பொய்யெல்லாம் மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

உரை:—நிலையாதனவற்றை நிலையின வென்றெண்ணி நெருங்கிய நகிலையுடைய பெண்டிரது அநுபவத்தின்கண் மயக்க முறுதற்குரிய என்னை (அதனிடை) மாண்டு போகாமற்றடுத்தருள் செய்து, பெண்ணை இடப்பாகங் கொண்ட பெருமானாகிய தலைவன் தன்னுடைய திருவடியையே அடையும் வண்ணம் எனக்கருள் செய்தபடி வேறு யார் பெறவல்லவர்? இஃதே அதிசயம். (ரு)

மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி எனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீ றணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ணம்
அண்ணலெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

உரை:—மண்ணுலகிற் பிறந்திளைத்துச் செத்து வீழ்தற்குரியேனை, நினைப்பதற்கரிய அன்பினைக் கொடுத்து ஆட்கொண்டு, அடியேனையுந் தனது திருவெண்ணீற்றுப் பொடியை அணியச்செய்து புனிதமான உயர் நெறியையே அடையும்படி, பெருமான் எனக்கருளிய முறையை வேறு யார் பெறவல்லார்? இது அதிசயமே.

குறிப்பு:—எண்ணமிலா - மனத்தால் எதிர்பாராத என்று முரைப்பர். சுண்ணம் - பொடி. (சு)

பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர நிற்பேன்உன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேன்நான் உடையானே அடியேனை வருகஎன்
றஞ்சேஎன் றருளியவா றார்பெறுவார் அச்சோவே.

உரை:—பஞ்சு போன்ற பாதமுடைய மாதர் கடைக்கண் பார்வையால் இடைஞ்சற்பட்டு, நெஞ்சிலே உண்டாகிய துயர்

மிகும்படி நிற்கும்இயல் புடையேன் உனது திருவருளைப் பெற்றேன். நான் உய்ந்தேன் என்னை உடையவனே, அடியேனை 'நீவா, பயப்படாதே' என்று அருள் செய்த முறை வேறு யார் பெற வல்லார் இது அதிசயமே. (௫)

வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழற் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு பரிசறவென் துரிசுமறுத்
தந்தமெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே

உரை — வெந்து விழும் உடம்பின் சார்பாய பிறப்பை நிலையான தென்றெண்ணித் தீவினைகளை மிகச்செய்து பூங்கொத்துக் களை யணிந்த கூந்தலையும் சங்கினாலாய வளையல்களையுமணிந்த பெண்டிரது குவிந்த தனங்களின் மேல் விருப்பம் வைக்கும் இயல்புடைய எனது பாசத்தை நீக்கி, ஆட்கொண்டு, என் உயிர்ப்போதத்தை கெடும்படி, என் குற்றத்தை யொழித்து முடிவான பேற்றை எனக்கருள் செய்த முறையை வேறு யார் பெறவல்லார்?

குறிப்பு — கொத்து என்பதன் மெலிபு, கொந்து. கோல் - சங்கு. துரிசு - குற்றம். அந்தம் - முடிவான இன்பம் முடிவான நிலை (௬)

தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை
ஐயனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே

உரை — பெண்டிர் மயக்கிலே அமிழ்ந்து விழுந்திருந்த என்னை மெதுவாகக் கொண்டுபோய் மலமாகிய அடிப்படையை உருவி (எறிந்து), உய்தி கூடும் வழியைக் காண்பித்து ஓங்காரத்தின் உண்மைக் கருத்தினை, அப்பன் எனக்கருள்செய்த விதம் வேறு யார் பெறவல்லார்? இது அதிசயமே (௭)

சாதல்பிறப் பென்னுந் தடஞ்சுழியில் தடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார் கலவியிலே விழுவேனை
மாதொருகூ றுடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

உரை:—பிறப்பு இறப்பென்னும் பெரிய சுழியிலகப்பட்டுத் தடுமாறிக் காமமிகுந்து அழகிய நகையுடைய மாதர் புணர்ச்சியிலே விழு மியல்புடைய என்னை, உமையொருபாகன் தனது திருவடியே அடையும்படி, (எவற்றிற்கும்) ஆதியாகிய அவன் அருள் செய்தவாறு யார் பெறவல்லார்? இது அதிசயமே. (௮)

செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

உரை:—எவற்றிற்கும் ஆதியாகிய தலைவன், செம்மையின் நயம் அறியாத மூடரொடுந்திரியு மியல்புடைய எனது மூவகைப் பாசங்களையுங் களைந்து, (ஒன்றுக்கும் பற்றாத) அடியேங்களையும் ஒரு பொருளாக மதித்து, நாயைச் சிவிகையிலேற்றினாற்போல உயர்வித்த தாய்போலவான் எனக்கருளிய விதம் வேறு யார் பெற வல்லார்? இது அதிசயமே. (௯)

திருச்சிற்றம்பலம்

## திருவாசகம் முற்றிற்று.

ஆகத் திருப்பதிகங்கள் ௫௧ - க்குப் பாடல் தொகை - ௬௫௮.

## திருவாசகச் சிறப்பு

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்

---

## நால்வர் திருநக்ஷத்திரம்

சித்திரைச் சதயம் அப்பர் சிறந்தவை காசி மூலம்
அத்தரைப் பணிசம் பந்தர் ஆனிமா மகத்தில் அந்த
முத்தர்வா தவூரர் முதியநல் ஆடிதன்னில்
சுத்தமான சோதிநாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்

---

## நால்வர் வயசு

அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரர்க்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம்—இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி

---

# சில திருத்தக் குறிப்புக்கள்



[கீழ்வரும் குறிப்புக்களை, உரிய இடங்களில் சேர்த்து வாசித்துக் கொள்க

இவை, திருவாளர் பண்டிதமணி மு கதிரேசச் செட்டியார் அவர்கள், திருவாளர் ந மு வேங்கடசாமி நாட்டாரவர்கள் திருத்தக் குறிப்புக்களைத் தழுவிச் சேர்க்கப்பட்டன —

*திருவாசகப் பொழிப்புரை ௩ - ம் பக்கம் எ - வது அடி— பின்னகம் - (அன்னை என்பது அந்நை எனச் சிலப்பதிகாரத்து வந்துள்ளதுபோல) 'பின்னல்' என்பதனடியாகப் பிறந்து 'சடை' எனும் பொருள்படுமோ என்று நினைக்கிறேன் அதுவே அவனுக்குச் சிறந்த தலைக்கோலமாகலின்*

*எ - ம் பக்கம் ௧௨ - வது அடி—மெய்யே உன் பொன்னடிகள் கண்டு - உண்மையாகவே நினது திருவடிகளைக் கண்டு எனவும் பொருள் கொள்ளலாம் 'கண்ணார் நுதலாய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர' என்பதுபோலப் பலவிடங்களில் வருதலின்*

*அ - ம் பக்கம். ௩௬ - வது அடி—வெய்யாய் தணியாய் 'தண்ணியல் வெம்மையினான்' என்பது ஆளுடைய நம்பிகள் அருளிப்பாடு*

*அ - ம் பக்கம் ௪0 - வது அடி—'அஞ்ஞானம்'—ஐயம், திரிபு அறியாமை என்னும் மூன்றையும் அடக்கி அஞ்ஞானமென்றார் இஃது உபலக்கணம்*

*௧௬ - ம் பக்கம் ௮௬ - வது அடி—என்றென்றும் - தனித்தனி கூவிக் கூவி என்று கூட்டிக்கொண்டால் 'ஆற்றேன்' எனும் ஒருமையுடன் 'மெய்யானோ' எனும் பன்மை பொருந்திவிடும்.*

அஎ - ம் பககம். உ0௧ - வது அடி—தாளி அறுகின் - தாளி யாகிய அறுகின்.

அகூ - ம் பக்கம். உஉ0 - வது அடி—சொன்மாலை - பாமாலை.

அகூ - ம் பக்கம். உஉரு - வது அடி—சயசய - நின்வெற்றி ஓங்குக.

கூக - ம் பக்கம்.—மெய்தான் அரும்பி - அரும்பி முதலிய எச்சங்கள் சினைவினை யாகலின் முதலொடும் பொருந்தும்.

க00 - ம் பக்கம். கஉ - வது பாட்டு—மானுளவான் மதித்து மிரேன் - புலியினை ஆளக் கருதியுமிரேன்.

க0க - ம் பக்கம் கரு - வது பாட்டு—அருளமுதம் - அருளாகிய அமுதம். அத்தமியேன் - அத்தகு தனிமையினேன்.

க0உ - ம் பக்கம். கச - வது பாட்டு—சாமாறே விரைகின்றேன் சதுராலே - சதுராலே சாமாறு விரைகின்றேன் எனக் கொண்டு இகழ்ச்சிக் குறிப்பாக்கலுமாம். சாரவான வெல்லாப் பொருளும் சார்தற்கு இடமானவன்

க0ரு - ம் பக்கம். 'வேனில் வேள்' என்ற பாட்டினுரையுள் 'பல்வினையு' மென்பதற்குப்பின் 'சிவாந்த வாயினையு' மென்பதைச் சேர்த்துக் கொள்க.

ககஎ - ம் பக்கம்.—'ஆடுகின்றிலை' என்ற பாட்டில் கூத்துடையான் - ஐந்தொழிற் திருக்கூத்தாடும் முதல்வன்

கஉரு - ம் பக்கம். உக - வது வரியில் 'அவன் பிரிவினை புணராமையால்' என்பதற்குப் பதிலாகக் 'காணப் பெறாது வைத்தும்' என்பதை யமைத்துககொள்க.

கஉகூ - ம் பக்கம். சகூ - வது பாட்டு—பட்டிமண்டபம் - வித்தியாமண்டப மாகும். சிலப்பதிகாரம் இந்திர விழவூரெடுத்த காதை க0உ - வது அடி - 'பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண்டப மும்' என்பதற்கு அடியார்க்கு நல்லா ருரைத்ததை நோக்குக

பட்டி - நாய் என்று அகராதியி லிருப்பினும் ஆன்றோர் வழக்கி லில்லை.

கடகூ-ம் பக்கம். 'தேனைப்பாலை' என்னும் ருஅ-வது பாட்டின் உரைக் குறிப்பில் 'காண்க' என்பதற்குப்பின் 'உம்பரானை - மேலாய தேவனை என்றுமாம்' என்றதைச சேர்த்துக் கொள்க.

கருசு-ம் பக்கம். மாறிலாத என்ற கூக-வது பாட்டின் இறுதியடியில் 'நெஞ்சுடைய நாயினேன்' என்பதை, 'நெஞ்சுடையன் ஆயினேன்' எனத் திருத்திக்கொள்க.

கருஎ-ம் பக்கம். கூசு-வது பாட்டின் குறிப்பில் க-வது உ-வது வரிகளில் 'என்பதற்குவானன்' என்பதை எடுத்துவிட்டு 'என்பதன் இறுதி மகரத்திற்கு னகரம்' என்பதை அமைத்துக் கொள்க

கருஅ-ம் பக்கம். 'வானநாடரும்' என்ற கூரு-வது பாட்டின் குறிப்பின் இறுதியில் 'வையகத்துடைய இசசையே' யென்று பாடங்கொண்டு, 'உலகினுடைய வித்தானவனே எனப் பொருள் கொள்வது முண்டு. அவவாறு கொள்ளுமிடத்து நைய என்பதற்கு உள்ளம் நைய எனப் பொருள் கொள்க' என்பதைச சேரத்துக கொள்க.

கசுட-ம் பககம் அடிககுறிப்பில் 'கொள்ளப் படும்' என்பதற்குப்பின் 'விடாதி' 'விட்டிடாதி' யென்பன 'விடுதி' 'விட்டிடுதி' யெனத் திரிந்துள்ளன என்பதைச சேர்கக.

கசுஎ-ம் பககம். 'நீர்க்கின்ற' என்னும் அ-வது பாட்டின் உரையில் பயப்படும்படி யென்றதற்குப் பின் 'ஒலிக்கின்ற' என்றதைச சோத்துக்கொள்க. எப்பொழுது என்பதற்குப்பின் 'அல்லது எங்ஙனம்' என்பதைச சேர்த்துக் கொள்க.

கஎக-ம் பக்கம். 'களிவந்த' என்ற கரு-வது பாட்டின் உரையுள் 'தந்தையாயினூர் தலைவனே' என்பதற்குப் பதிலாக 'எந்தையாகிய பெருமானே' யென்பதை அமைக்க.

# ருசஅ சில திருத்தக் குறிப்புகள்

கஎ௩-ம் பக்கம். 'இருக்கென்னை' என்ற கஅ-வது பாட்டி னுரையுள் 'ஒற்றிவைப்பாய்' என்பதற்குப் பதிலாக 'ஒற்றி வைத்துக் கொள்ளுக' என்பதை அமைக்க

கஅ0-ம் பக்கம். 'புலன்கள்' என்ற உஅ-வது பாட்டின் குறிப்பின் முடிவில், கருணாகரன் - கருணைக்கு நிலயமானவன். ஆகரம் - சாதகம், தொழுகுலம் - தெய்வம் என்பவற்றைச் சேர்க்க

கஅஉ-ம் பக்கம் 'சசைசயனை' என்னும் ௩க-வது பாட்டின் உரையுள் 'வெளிப்படையான்' என்பதற்குப் பதிலாக 'மிக்க குளிர்ச்சியுடைய' என்பதை அமைத்துக் கொள்க

கஅஉ-ம் பக்கம். 'அடர்க்கரி' என்ற பாட்டின் குறிப்பின் முடிவில் 'கரிதாய்' எனப் பாடங்கொண்டு 'கருமை நிறமுடைய' என்றும் பொருள் கொள்ளலாம், என்பதைச் சேர்க்க

கஅஎ-ம் பக்கம் 'வலைத்தலை' என்னும் ச0-வது பாட்டி னுரையுள் 'உச்சியாய்' என்பதற்குப் பதிலாக 'மிலிருக்கும் தலைவனே' என்பதை அமைத்துக் கொள்க

கஅகூ-ம் பக்கம் 'மன்னவனை' என்னும் சஉ-வது பாட்டி னுரையுள் 'இப்படைப்பு முழுதும்' என்பதற்குப் பதிலாக 'இவை எல்லாமும்' என்பதை யமைத்துக் கொள்க

ககூகூ-ம் பக்கம் 'பாசம்' என்ற உ-வது பாட்டின் குறிப்பி னுள் 'என்பாய என்றோ' என்றதற்குப் பின் 'என்று கூறவாய' 'எனப் பொருள் கொள்ளலுமாம்' என்பதைச் சேர்க்க

உ0உ-ம் பக்கம் 'கோழி சிலம்ப' என்ற அ-வது பாட்டின் குறிப்பில் ஆழியான் - வஞ்சகன், கள்வன் என்னுஞ் சொற்களை எடுத்து விடுக.

உ0ரு-ம் பக்கம். 'ஆர்த்த பிறவி' என்ற கஉ-வது பாட்டின் உரையுள் 'ஆடைகள்' என்பதற்குப் பதிலாக 'அணிகலன்கள்' என்று அமைக்க.

௨0௯-ம் பக்கம். 'பைங்குவளை' என்ற ௧௩-வது பாட்டில் 'தங்கள்' என்பதற்குத் 'தங்கண்' என்று பாடங்கொள்வாரு முளர் என்றதைச் சேர்க்க.

௨௩0-ம் பக்கம். 'ஒன்றாய்' என்ற ௮-வது பாட்டின் குறிப்பினுள் 'என்றார்' என்பதற்குப் பின் 'சிவதத்துவம் முதலிய வற்றில் இறைவன் அத்துவிதமாகக் கலந்து அவற்றைத் தோற்று வித்தலின் இறைவனை அவையேயா யிருப்பதாகக் கூறினார்' என் பதைச் சேர்த்துக் கொள்க

௨௩௩-ம் பக்கம். 'நோயுற்று' என்னும் ௧0-வது பாட்டி னுரையுள் 'குளிர்ந்த' என்பதை எடுத்துவிடவும்.

௨௩௩-ம் பக்கம். 'கருவாய்' என்னும் ௧௪-வது பாட்டி னுரையுள் 'பூப்போன்று' என்பதற்குப் பதிலாகப் 'பூவினையுடைய' என்றமைத்துக் கொள்க

௨௪௪-ம் பக்கம் 'கனவேயும்' என்பதன் ௧0-வது பாட்டி னுரையுள் 'வேலபோன்ற' என்பதற்குமுன் 'பகைவர் பாற் சினந்து கொல்லும்' என்றதைச் சேர்த்துக்கொண்டு 'பருத்த' என்ற சொல்லை எடுத்து விடுக.

௨௭௧-ம் பக்கம் 'தக்கனையும்' என்ற ௯-வது பாட்டி னுரையுள் மூன்றாவது வரியில் 'வந்தவர்களை' என்பதற்குப் பின் 'ஒறுத்து ஒழித்தமை' என்பதைச் சேர்த்துக் கொள்க.

௩0௯-ம் பக்கம். 'தீ தில்லை' என்ற ௭-வது பாட்டின் குறிப்பில் 'மாணுடையவன்' என்பதற்குப்பின் 'பிரமசாரி என்றுங் கொள்க' என்பதைச் சேர்க்க.

௩௧௨-ம் பக்கம் 'சீரார் பவளம்' என்ற ௧-வது பாட்டின் குறிப்பில் 'வேறுகண்' என்பதற்குப்பின் 'என்றார்' என்பதைச் சேர்த்து முற்றுப் புள்ளியிடுக.

௩௨௯-ம் பக்கம். 'நீலவுரு' என்னும் ௩-வது பாட்டினுரை யுள் 'சாயலுடைய' என்பதைச் 'சாயலுடையவ' என்று திருத்திக் கொள்க.

௩௪௦ - ம் பக்கம். ௪-வது வரியில் 'உதயவொளி' என்பதற்குப் பின் 'உதய மென்பதற்கு உதயகிரியெனப் பொருள் கொண்டு அதனை எழ என்பதனோடு சேர்த்தலு முண்டு' என்பதைச சேர்க்க.

௩௫௯ - ம் பக்கம். ௯ - வது பாட்டின் முதலடியில் 'இந்திரந்' என்றதை 'இரந்திரந்' எனத் திருத்திக் கொள்க

௩௬௫ - ம் பக்கம். 'புற்றுமாய்' என்னும் பாட்டின் உரையில் 'தன்மைத்தான' என்பதைத் 'தன்மையனுன' என்று திருத்திக் கொள்க.

௩௬௬ - ம் பக்கம் 'புலையனேனையும்' என்ற பாட்டின் உரையுள் 'மலவில்லானே' என்பதற்குப்பின 'திருப்பெருந்துறையில் விரும்பி யமர்ந்த சிவபெருமானே' என்றதைச சேர்க்க

௩௬௮ - ம் பக்கம். 'ஆட்டுத்தேவர்' என்ற பாட்டின் குறிப்பில் 'அதாவது' என்பதற்குப் பதிலாக 'அவரை' என்று திருத்துக

௩௮௦ - ம் பக்கம். 'கருடக கொடியோன்' என்ற பாட்டின் குறிப்பினிறுதியில் 'பொல்லல் - பொள்ளல்' 'துளையிடல்' என்றதைச சேர்க்கவும்.

௩௯௩ - ம் பக்கம் 'சுடற்பொற் குன்றை' என்ற பாட்டின் உரையுள் 'முடியாத' என்பதற்குப்பின் தன்னை எனக்குப் பேரின்பம் நுகரத் தந்தருளிய' என்றதைச சேர்க்க

௪௧௧ - ம் பக்கம் 'திருத்தனே' என்ற பாட்டின் குறிப்பினிறுதியில் எல்லாவற்றையும் ஒடுக்கிய காலத்தில் ஒடுக்கினமைக்கு அறிகுறியான நீற்றினை இறைவன் அணிந்து விளக்குதலின் நீற்றினை - என்று முள்ளவனே என்பதைச சேர்த்துக்கொள்க

௪௧௧ - ம் பக்கம் 'எங்கள் நாயகனே' என்ற பாட்டின் உரையின் ௨ - வது வரியில் 'என விருவா' என்பதை 'என்னு மிருவா' என்றும், குறிப்பின் ௨ - வது வரியில் 'ஞானு' என்பதை 'ஞான' என்றும் திருத்திக் கொள்க.

௪௩௯ - ம் பக்கம். 'கூடிக்கூடி' என்ற பாட்டின் உரையில் 'நீ' என்பதற்குப் பின் 'என்னொடு அத்துவிதமாய் இணைந்து'

என்பதைச் சேர்த்துக் கொள்க. குறிப்பினிறுதியில் 'அருள் கலந்தே' என்பதை 'கலந்தே அருள் என மாறுக' என்பதைச் சேர்த்துக் கொள்க.

௪௯௭-ம் பக்கம். 'வம்பனாய்த் திரிவேனை' என்னும் பாட்டினுரையில் 'அன்பராயினார்க்கு' என்பதற்குப் பின் 'அருள் புரிந்து உண்மையடி யார்பால்' என்பதைச் சேர்த்துக் கொள்க.

௫௧௩-ம் பக்கம். 'நிற்பார் நிற்க' என்ற பாட்டின் உரையில் 'பெருமை பாராட்டினால்' என்பதற்குப் பதிலாக 'தலைசாய்த்தால்' என்ற அமைத்துக் கொள்க குறிப்புள் பேழ்கணித்தல் முதல் இறுதி வரையுள்ள பகுதியை எடுத்து விடுக.

௫௨௮-ம் பக்கம். 'ஒன்றினொடொன்று' என்ற பாட்டினுரையுள் ௪-வது வரியில் 'நிலைபெறுதல்' என்பதற்குப் பதிலாக 'பின்னொடுங்குதல்' என்பதை அமைத்துக் கொள்க.

௫௨௯-ம் பக்கம் 'பந்தவிகார' என்ற பாட்டின் உரையுள் ௯-வது வரியில் 'இடையூறுகள்' என்பதற்குப்பின் 'தோன்றுதல்' என்பதைச் சோத்துக் கொள்க.

௫௨௬-ம் பககம். 'மண்ணினில்' என்ற பாட்டின் உரையுள் ௯-வது வரியில் 'கலக்கஙகள்' என்பதற்குப் பின் 'எழுந்தொழிதல்' என்பதைச் சேர்த்துக கொள்க. அந்த வரியில் 'நிகழாது' என்பதற்குப் பின் 'இறைவன்பால் அன்பு செய்யும் அடியார்களுடைய உள்ளத்தைப் புதிதாக மகிழ்வித்தல் நிகழாது' என்பதைச் சோத்துக கொள்க.

# சில திருத்தக் குறிப்புக்கள்

சைவத்திருவாளர் - அ மு சரவண முதலியாரவர்கள் திருத்தக் குறிப்புக்கள் :—

*௧௧௧ - வது பக்கம். ௨௫ - வது பாட்டு—வண்ணந்தான் அது காட்டி வடிவு காட்டி மலர்க்கழல்கள் அவைகாட்டி - வண்ணம், வடிவு, கழல் என்னு முறை உண்மைக் காட்சியைப் புலப்படுத்து கின்றது. மக்கள் காட்சியில் செய்மையில் வடிவம், நெருங்க நெருங்க உறுப்பும் அண்மையில் வந்த பின் ஒளி அல்லது நிறமுந் தோன்றும். கடவுள் காட்சியில் முதலில் ஒளியும் பின்னர் வடிவம் அதன் பின் திருவடி முதலிய உறுப்புங் காணப்படும்.*

*௧௧௨ - வது பக்கம். ௨௬-வது பாட்டு—வாக்குன் மணி வாரத் தைக் காக்கி - எனது வாயைத் தேவரீர் விஷயமாகப் பேசும் மாணிக்க வாசகருக்கு உரியதாக்கி எனினும் பொருந்தும் - பிறண்டும் ‘மாசில் மணியின் மணிவார்த்தை பேசிப் பிறப்பறுத் தேன்’ என்பார்.*

*௧௧௩ - வது பக்கம். ௨௭ - வது பாட்டு—கிடக்கின்றேனை... கரை காட்டி யாட்கொண்டாய் மூர்க்கனேற்கே—கரைகாட்டி யாட்கொண்டாய் என்பதை விகுதி பிரித்துக் கூட்டிக் கிடக்கின் றேனை ஆட்கொண்டு, மூர்க்கனேற்குக் கரைகாட்டினாய் என இயைக்க கிடக்கின்றேனை என்னும் வினையாலணையும் பெயர் கிடந்த என்ற பொருளில் வருவது அரிது. ‘ஐ’ யைச் சாரியை யாகவும் கொள்ளலாம்.*

*௧௨௩ - ௧௨௪ - வது பக்கங்கள். ௪௦-வது பாட்டு—தயிராகி... போகேன்......உண்டுடுத் திருந்தேனே — நேர் முறையிலேயே பொருள் கொள்ளலாம்—தயிராகிப் போகேன்...ஊனிலாவியை ஓம்ப உண்டு உடுத்து இன்னமிருந்தேன் என வினைமுடிவு செய்க. போகேன்’ என்பதை முற்றெச்சமாகப் பொருள் கொள்க.*

*௧௨௪ - வது பக்கம். ௪௧-வது பாட்டு—யானையை ஒத்திருந்து - ஒத்திருந்து கண்டிலேன் எனக் கூட்டி, யானை தன்னை ( - தனது*

உடலை) அறியாததுபோல யான் உள்ளக் கருவைக் கண்டிலேன் எனவும் பொருள் கொள்ளலாம்.

௧௨௪ - வது பக்கம். ௪௧ - வது பாட்டு—கிற்றிலேன் கிற்பன் உணவே—வருதற்குக் கிற்றிலேன், ஆனால் உண்ணுதற்குக் கிற்பேன் - உணவை என்றே பொருள் கொள்ளலாம். மேற்பாட்டிலும் ‘ உண்டுடுத் திருந்தேன் ’ எனக் கூறுதல் காண்க.

௧௨௮ - வது பக்கம். ௪௭ - வது பாட்டு—அஃதிலான்—அத் தொடர்பிலான் எனப் பொருளுரைப்பின் திணையும் எண்ணும் வழுவாதலில்லை.

௧௯௰ - வது பக்கம் ௫௰ - வது பாட்டு—ஆண்டநாள் அறிவனோ அல்லனே—தேவரீர் ஆண்ட பின்னர் யான் அறிவேனோ மூடனோ எனவுங் கொள்ளலாம்

௧௫௪ - வது பக்கம் ௪௰ - வது பாட்டு—என்பும் பொய்—என் அன்பும் பொய்யானால் வினையேன் பொய்யாக அழுதால் உன்னை அடைதல் கூடுமோ ? எனக் கொள்ளுமொன்று

௧௬௮ - வது பக்கம் ௬௬ - வது பாட்டு—ஆடுவித்தவா . நைய . . இசைசையே—ஆடுவித்தவாறும் இசைசை நையவே (நைதற் பொருட்டே) எனவும் கொள்ளலாம்

௧௯௰ - வது பக்கம் ௯௨ - வது பாட்டு—துப்பனே-நுகர்ச்சிப் பொருளாயுள்ளவனே என்றுங் கொள்ளலாம்

௧௯௧ - வது பக்கம் ௯௯ - வது பாட்டு—பன்ன . எனனனே... பாடவே - ‘ பன்னவும் பாடவும் வருகவென எனை ’ என்றுங் கூட்டலாம்

௨௮௰ - வது பக்கம். ௨௪-வது பாட்டு—குலங்களைந்தாய் களைந்தாய் என்னைக் குற்றம் - எனது குலப்பற்றை முன்னாகக் களைந்து பின்னர் ஏனைய குற்றங்களைக் களைந்தாய் எனக் கூறுதலமையும். குல நினைவு வீடு பேற்றுக்கு ஒரு பெருந்தடையென்பது திருநாளைப் போவாரை இறைவன் நெருப்பில் இறங்குமாறு செய்து அந்நினைவைப் போக்கி வீடு அருளியமையால் நன்கு புலனாவ தொன்று.

## சில திருத்தக் குறிப்புக்கள்

பிறண்டும் அடிகள் ‘ சாதிகுலம் பிறப்பென்னும் சுழி ’ எனக் கூறுதல் காண்க.

௧௮௨ - வது பக்கம். ௫௨ - வது பாட்டு—கடற்கரிதா யெழு நஞ்சு - கடலின்கண் கரிதாய் எழும் நஞ்சு எனவுங் கொள்ளலாம்

௧௮௨ - வது பக்கம் ௫௩ - வது பாட்டு—கண்டது செய்து .. மிண்டுகின்றேனை - ‘ கருணைமட்டுப் பருகிக் களித்தும் கண்டது செய்து மிண்டுகின்றேனை ’ என்று கொண்டு கூட்டி. “ தேவரா ஆட்கொண்ட ஞான்று கருணைத் தேனைப் பருகி மகிழ்ந்தும், அருள் வழிச் செல்லாது கண்டது செய்து திரியுமென்னை விட்டுவிடாதே, முன்போல் இன்னொரு முறை ஆட்கொள்க ’ எனக் கொள்ளின் நன்கு பொருந்தும்.

௧௮௬ - வது பக்கம் ௫௭ - வது பாட்டு—திரைசோமடந்தை-கங்காதேவி எனப் பொருள் கொளல் நேரிது.

௧௮௯ - வது பக்கம் ௪௪ - வது பாட்டு—தொழுது செல்வான் - வணங்கிச் செல்வதற்கு எனப் பொருள் கோடலே அமையும்.

௧௯௧ - வது பக்கம் ௪௭ - வது பாட்டு—வெண்மணிப் பணிலம் .. ..பந்தப் பெருமை—உம்மைத் தொகையில் வலலினம் மிகாதாகலின் முத்தைத் தருகிற சங்கு, அதனின் பெருமை எனக் கோடலே யமையும்.

௧௯௪ - வது பக்கம் ௧ - வது பாட்டு—எந்தேனும் ஆகா இடந்தாள்—ஆகாள் என்பதை முற்றெச்சமாக்கி ஆகாமற் இடந்தாள் எனக் கொண்டு ‘ நின் செவிதான் ’ என்பதுவரை நாயகிய வளை முன்னிலைப் படுத்தியதாகவும் பின்னர்த் தன்னோடு இருந்தவர்களை முன்னிலைப்படுத்திக் கூறியதாகவும் கொள்ளலாம் அன்றேல், தனக்குள் எண்ணியதாகவும் கொள்ளலாம்.

௧௯௫ - வது பக்கம். ௨ - வது பாட்டு—பாசம் பரஞ்சோதி .. அமளிக்கே—‘ இரவும் பகலும் நாம் பேசும்போதெல்லாம் பாசம்

பரஞ்சோதிக் கென்பாய், இப்போது போதார் அமளிக்கே நேசமும் வைத்தனையோ' என்றும் கொள்ளலாம்.

கசூரு-வது பக்கம் உ-வது பாட்டு—ஈசனார்க கன்பார் யாம் ஆர்—'அன்பு நிறைந்த யாம் எத்தன்மையோம், அரனடியில் அயரா அன்பினையுடைய யாம் அநாயனம் செல்வோமா' எனக் கொள்ளின் திணை வழுவமைதி வேண்டுவதில்லை.

கசூசு-வது பக்கம் ரு-வது பாட்டு—பத்துடையீர்...... .. இத்தனையும் வேண்டும் எமக்கு—பத்துடையீர் முதலிய சொற்களைக் கேட்டு எழுப்ப வந்தவர்கள் அவற்றைத் தம்மை எளனஞ் செய்யக் கூறியவையாகக் கொண்டு சித்தமழகியார் பாடாரோ எனக்கூறி நின்னை எழுப்ப வந்த எமக்கு இத்துணை அவமதிப்பும் வேண்டி யதே எனக் கோடலும் அமையும்.

சசஎ-வது பக்கம் சு-வது பாட்டு—எண்ணிக்கொடுள் ளவா .. ..எம்பாவாய் - எண்ணிக் கொடுள்ளவா சொல்லு கோம், ஆனல் அத்துணை நேரம்வரை இறைவனைப் பாடிக கசிந்துருக எமக்கு இயலாமற் போய்விடும் அதனல் கண்ணைத்துயின்று அவமே காலத்தைப் போககாமல் நீயே வந்து எண்ணிக் குறையிற் றுயில் எல் எனக கோடலும் அமையும்

உ0ரு-வது பக்கம் சஉ-வது பாட்டு—வார்கலைகள் ஆர்ப் பரவஞ் செய்ப—ஆடையில் ஒலியெழுதலின்மையால் மேகலைகள் என்ற அணிகள் என்றே பொருள்கோடல் அமையும்.

உ0சு-வது பக்கம் கஉ-வது பாட்டு — பைங்குவளை .. .. அரவத்தால் - குவளை, தாமரை முறையே அம்மைக்கும் அப்ப னுக்கும் ஆனமைபோல, குருகு, அரவம் முறையே ஆகுமெனக் கோடலே அமையும். இன்றேல் வலிந்து பொருள்கோடலும் உமாதேவிக்குப் பாம்பணி கூறலும் நேரும்.

உஉச-வது பக்கம். கச-வது பாட்டு—பிறவாய்... ..ஓட்டு கந்து - பிறவு - பிறப்பு, தொழிற்பெயர். ஓட்டு - முதனிலைத் தொழிற்பெயர்.

உ௬0 - வது பக்கம். க - வது பாட்டு—இசையின் - இஃது ஏவற்பன்மை யாதலின் இதனைப் பாடுவாராக எனப் படர்க்கையில் வைத்தும் பொருள்கோடல் பொருந்தாது.

உ௬௪ - வது பக்கம். ௬-வது பாட்டு—உலக்கைபல .. ..வந்து நின்றார - உலகமனைத்தும் உரலாயினும் போதாதெனச் சொல்லுமாறு பல உலக்கைகளை வரவிடுவார் பெரியார உலகங்கள் இடம் போதா எனச் சொல்லுமாறு காணப் பலவடியார்கள் வந்து நின்றார்.

உ௬௭ - வது பக்கம். க0-வது பாட்டு—செங்கயற் கண்பனி - மீன் போன்ற கண்களில் நீர்.

உ௬௮ - வது பக்கம். கக-வது பாட்டு—பாடுமின் ..வண்ணமும் - அண்டவாறும் வண்ணமும் வாய்திறந்து பாடுமின் என முடிக்க.

உ௬௯ - வது பக்கம் க௩-வது பாட்டு—எம்பெருமான் இமவான் மகட்குத், தன்னுடைய கேள்வன் மகன் தகப்பன் தமையன்—'வாயுமனமுங் கடந்த மனோன்மணி, பேயுங்கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை, ஆயுமறிவுங் கடந்த அரனுக்குத், தாயுமகளு நற்றாரமுமாமே' (திருமந்திரம்), 'கனகமார் கவினசெய் மன்றினில், அனக நாடகற்கெம் மன்னை, மனைவிதாய் தங்கை மகள்' (குமர குருபரர்) என்ற வாக்குகளை நோக்குக. 'தவளத்த நீறணியுந் தடந்தோ ளண்ணல் தன்னொருபால் அவளத்த னாமகனாந் தில்லை யான்' என்னும் திருக்கோவையாரும், 'சிவதத்துவத்தினின்றும் சத்தி தத்துவம் தோன்றலின் அவளத்தனா மென்றும், சத்தி தத்துவத்தி னின்றுஞ் சிவதத்துவம் தோன்றலின் மகனாமென்றுங் கூறினர். இமவான்மகட்குத் தன்னுடைக் கேள்வன்மகன் தகப்பன் தமையன் என்பதும் அப்பொருண்மேற்று வந்தது என்னும் பேராசிரியருரையும் ஈண்டு உன்னற் குரியன.

உ௭க - வது பக்கம். க௬-வது பாட்டு—ஆவகை ... வண்ணங்கள் பாடி - உய்யுமாறு நாமும் அன்பரோடு வந்து அடிமை செய்யுந் திறங்களைப்பாடி எனக்கோடலே யமையும்.

உ௬உ - வது பக்கம் ௧எ-வது பாட்டு—உய்யஅன்று - அன்று எனுஞ்சொல் எதிர்காலத்திலும் வருவதை 'அன்றறிவா மென்னா தறஞ்செய்' என்னும் திருக்குறளா லுணாக.

உ௬௬ - வது பக்கம் ௧௩ வது பாட்டு—கவித்தகைம்மேல் இட்டு நின்றாடும் அரவம் - திருக்கூத்தனது கவித்த (இடது) திருக் கரத்தில் இடப்பட்டு படமெடுத்து நின்றாடும் அரவம்

உ௬௯ - வது பக்கம் ௬ - வது பாட்டு—குலங் கல்வியென்னும் பித்த உலகு ..இறப்பெனனுஞ் சித்தவிகாரம்—'என்னும்' இரண் டடிகளிலும் வருதலால் கல்விவரையிலுள்ள வற்றைப் பித்த வுல கிற்கு அடையாகவும் பிறப்பிறப்பு என்பவற்றைச சித்த விகாரத் துக்கு அடையாகவும் கொள்ளுத லமையும்

உ௱௩ - வது பக்கம் ௧0 - வது பாட்டு—யானிங்கிருந்து செல்வம் நயந்தறியா வண்ணம் எல்லாவற்றாலும் தாய்போன்று வந்து ஆண்டுகொண்ட என முடிக்கலாம்

உ௱௨ - வது பக்கம். ௧௨ - வது பாட்டு—ஆணகருணையும் அங்குற்றேதான் - அவனிடம் என் பொருட்டுண்டான கருணையும் அங்கு மிகுந்ததனுற்றான் (என் தகுதியனறு, அவன் பெருங் கருணைதான்) என்றபடி.

உ௱௬ - வது பக்கம் ௧௫ - வது பாட்டு—ஆணடிலனேல்-ஆண் பாலும் பெண்பாலும விரவி சிறப்பினால ஆணடிலன் என ஆண் பால் முடியைப் பெற்றன.

உ௱௫ - வது பக்கம். ௧எ - வது பாட்டு—என்றவன்றன் - என்று என்றால் துதிக்கப்பெறும் அவன்றன்னடி என இயைக்க. அன்றேல், செல்வத்தில் அழுந்திக கிடந்தமை யெல்லாம் வண்ணின் வினையாகி விடும்.

உ௱௬ - வது பக்கம். ௨0 - வது பாட்டு—இறுமாக்க - வீடு ஊாத்துவ முகமும் பிறப்பு அதோ முகமும் ஆதலின் இறுமாக்க என்பதற்கு வீடடைய எனப் பொருள் கொள்ளலாம், இதனை

## சில திருத்தக் குறிப்புக்கள்

'என்றும் வீடடைந்தவர்' எனத் தொடங்கும் வைராக்கிய சதகச் செய்யுளாலும் அதற்குச சிதம்பர சுவாமிகள் எழுதிய அரிய உரையாலும் அறியலாம்.

உ௬௪ - வது பக்கம். ௫ - வது பாட்டு—உருவந்து—கொண்டருளி - பூதலத்து ஓர் உரு வந்து யான் உகப்பெய்த என்னை ஆட்கொண்டருளி எனவும் இயைக்கலாம்.

உ௬உ - வது பக்கம். அ - வது பாட்டு—மறந்தே யுந்தன் கழல் நான் மறவாவண்ணம் - அதனை மறந்தும் செய்யேன் யான் என்பதுபோல இத்தொடர் அமைந்திருக்கிறது. மறந்தும் பிறன் கேடு சூழற்க, வழுக்கியும் வாயாற் சொலல் என்பவற்றை நோக்குக.

உ௬௩ - வது பக்கம். ௧0 - வது பாட்டு—சினவேல் - உடையான் சினத்தை உடைமை மேலேற்றியது உபசாரம்.

உ௬௫ - வது பக்கம். ௧உ - வது பாட்டு—பத்திக் கடலுட் பதித்த - பத்திக் கடலுட்டன்னைப் பதித்த எனவும் கொள்ளலாம்.

உ௭௩ - வது பக்கம். ௬ - வது பாட்டு—எய்திவிடுவர் - இதை விகுதி பிரித்துக்கூட்டி யோகத்தால் உடலை விட்டு விண்ணுலகத்தை யடைவா எனப் பொருள்கோடலே பொருந்தும். விண்ணை யுடைய இறப்பார் என்பது அமைதலரிது.

உ௮௫ - வது பக்கம். ௬ - வது பாட்டு—எரிமூன்று தேவர்க்கிரங்கி ..கிரமூன்றற .. ..எரிகின்ற சோம சூரி யாக்கினி என்னும் மூன்று தேவர்கட்கும் இரங்கி அவர்கள் ஒளிப்பொருள்களாமாறு அருளி - ('மெய்ச சுடருக் கெல்லாம் ஒளிவந்த பூங்கழ லுத்தரகோச மங்கைக் கரசே' என்றார் பிறண்டும்.) சிரமூன்றற - தக்கன், எச்சன், பிரமன் இம் மூவர் தலை. இதனை 'தக்கனற்றலையு மெச்சனவன் றலையுந் தாமரை நான் முகன்றலையும், ஒக்கவிண் டுருள ஒண்டிருப் புருவம் நெரித்தருளிய வுருத்திரனே' என்னும் திருமாளிகைத் தேவர் திருவிசைப் பாவாலறிக. மூன்று தேவர்க்கருளி

மூன்று சிரங்கொய்து மூன்றுருவமாகி மூன்று புரமெரித்தார் என்ற மும்மை நயத்தை யோர்க.

௩கந - வது பக்கம். ௩-வது பாட்டு—தன்கருணைவெள்ளத்து மன்னூற மன்னும் - தன்கருணைப் பெருக்கோடு பெருமை சுரக்க நிலைபெற்ற என இயைக்க. ஊன்ற என்னும் பெயரெச்சம் ஊற என இடைகுறையாது. குறையின் வினையெச்சமாதல் காண்க.

௩உரு - வது பக்கம் க-வது பாட்டு—இறைவன் மனவாக்கிற் கெட்டாதவனாயினும் இசைப் பிரியனாதலின் நின் இன்னிசையைக் கேட்டவளவில் வருவானென அடிகள் அருளுகின்றார்.

௩௩௪ - வது பக்கம். ௪ - வது பாட்டு செய்யவாய்ப் பைஞ் சிறகிற் செல்வீ - (செல்+வீ - பறந்து செல்கின்ற கிளியே—வீ - பறவை, செய்யவாயும், பைஞ்சிறகு முடைமையான் ஈண்டு கிளியை உணர்த்திற்று.)

௩ருக - வது பக்கம். எ - வது பாட்டு—இரவும் நமககம்பலக் கூத்தன் - இரவு எனவேகொண்டு அம்பலக்கூத்தன் என்பதை அண்மைவிளியாகக் கொண்டு ' நீ ' என்னு மெழுவாயை வருவித் துரைப்பின் இடமயக்கம் ஏற்படாது.

௩எக - வது பக்கம். க0 - வது பாட்டு—வழங்குகின்றாய்க்குன் அருளா ரமுதத்தை வாரிக்கொண்டு, விழுங்குகினறேன் - உன் அருளாரமுதத்தை வழங்குகின்றாயக்கு - வழங்குகின்ற நின் பொருட்டு எனப் பொருள் கொள்க. விளையாட்டு நினைவில் இருக்குங் குழந்தைக்குத் தாய் வலிந்து உணவூட்டுங்கால் அது அத்தாயின் பொருட்டு உணணுமேயன்றித் தன்பொருட்டென வெண்ணி யுண்ணாது. அதுபோல இக்கருத்து முன்னும் பின்னு முள்ள பாக்களா லறியப்படும்.

௩அஉ - வது பக்கம். ௫ - வது பாட்டு—புளியம்பழமொத்திருந் தேன் - புளியம்பழம் உள்ளே கசிவு முதலிய உடைத்தாயிருப்

பினும் புறத்தே திண்ணிய தோல் மூடியிருத்தளவிலே உவமை யாகக் கொள்ளினுமாம்.

௬அச - வது பக்கம். அ-வதுபாட்டு—தலைமேல் வைத்து என் பதுவரை உடற்றொண்டு, அறற்றி என்பதுவரை உரைத்தொண்டு, அழல்சேர மெழுகொப்ப ஆசைப்படல் (-உருகுதல்) உளத் தொண்டு, எனவே முத்தொண்டும் செய்ய விரும்பினேன் என்றபடி.

---

# பாட்டு முதற்குறிப்பகராதி



# பாட்டு முதற்குறிப்பகராதி

---

திருமகள் விலாச அச்சகம், சென்னை—1955.